G.S.N.

★

1970-ல்

மாநிலத் தமிழாசிரியர் கழகம்

நடத்திய

கவிதை நாடகப் போட்டியில்

முதற் பரிசுக்கான

தங்கப் பதக்கம்

பெற்ற

நாடகக் காவியம்



14

# மூன்றாம் பிறை

" மூன்றாம்நாள் இளம்பிறைதான் வளர்ந்தே தீரும்!
தேன்காயும் முழுநிலவாய் அமுதம் வார்க்கும்!"

# மூன்றாம் பிறை

கவிஞர் புவியரசு

மணிவாசகர் பதிப்பகம்
55, லிங்கி தெரு, சென்னை-600 001.

○ 'MOONRAAM PIRAI'
A Verse play in Tamil

○ by PUVIYARASU

○ First Edition : DEC. 1988.

○ Pages 128+12



○ Cover : Maniam Selvan

○ Printed at : Karpakam Achakam-MDS-2

○ Published By :
Manivasakar Pathippagam, MADRAS-1

○ Price : Rs. 11-00

**படையல்...**

என் ஞான குரு, பேரூர் ஆதீனம்

**தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்**

அவர்களின் திருவடிகளுக்கும்...

எனக்குத் தாய்ப்பால் ஊட்டிய

**தமிழ்க் கல்லூரிக்கும்...**

" கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம்"
— திருவள்ளுவர்

" நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து.. "
— மணிவாசகர்

" நாடகாந்தம் கவித்வம்" — வடமொழி சுலோகம்

" நாடகமே உலகம்" — சேக்ஸ்பியர்

" நாநாட்டி பதுக்கு நாடகமு..."
— அண்ணமாச்சாரியார்



இக்காவியத்தைத் தேர்ந்தெடுத்த
நடுவர் பெருமக்கள் :

பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின்
முதல் துணைவேந்தர்

**தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்** *அவர்கள்*

பேராசிரியர்
**டாக்டர் சுப. அண்ணாமலை** *அவர்கள்*

பேராசிரியர்
**டாக்டர் மெ. சுந்தரம்** *அவர்கள்*

# மனித குலத்தை மகிழ்விக்கும் கலைஞர் புவியரசு

ச. மெய்யப்பன், எம். ஏ.,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

மணிவாசகர் பதிப்பகம் கால் நூற்றாண்டாக தமிழுக்கு நல்ல பணி செய்து வருவது நாடறிந்த உண்மையாகும். துறைதோறும் தமிழுக்கு வளம் சேர்ப்பதை தொண்டுள்ளத்தோடு நாளும் செய்து வருகிறது. பல துறைகளில் நல்லறிஞர்களின் நூல்களை வெளியிடும் திட்டத்தில் கவிஞர் புவியரசு அவர்களின் மூன்றாம் பிறை என்னும் நாடகநூல் வெளிவருகிறது. புவியரசு புகழ்மிக்க கவியரசு. மனிதகுலத்தை மகிழ்விக்கும் கலைஞர். காவியமும் ஓவியமும் வல்ல புலமைச் செல்வர். நாடகத் துறையில் ஆற்றல் மிகு படைப்பாளர்.

வளர்தமிழுக்கு வளம் சேர்க்கும் வானம்பாடி இயக்கத்தின் வலிமைமிக்க ஒலிப்பறவையாக விளங்குபவர். தேனிசைக் கவிதை மழை பொழியும் வானம்பாடி இவர். மாணவர் போற்றும் நல்லாசிரியர் நாடு மதிக்கும் நல்லறிஞர். பார்புகழும் பல்கலைச் செல்வர். பண்புமிகு பகுத்தறிவுச் செம்மல். பழகுதற்கினிய பண்பாளர்.

கதைக் கருவாலும், கூறும் திறத்தாலும், கற்பனை வளத்தாலும், சிந்தனைச் செழுமையாலும் மொழி வளத்தாலும் இப்படைப்பு சிறப்புப் பெறுகிறது.

இந் நூல் வெளிவர வழிவகுத்துக் கொடுத்த இனிய நண்பர் கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

" Who wrote this book?"

" Me Sir, It is my pride and misery!"

---

## கட்டியம்

---

இருபத்தியிரண்டு ஆண்டுகளுக்கு முன் எழுதி முடிக்கப் பட்டும், பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் பரிசு பெற்றும் ஒரு படைப்பு நூலாக வெளிவராதது எவ்வளவு வருத்தம் தரும் காரியம்!

இந்த இடைவெளிக் காலத்தில் இது பட்டபாடு 'தாளம்படுமோ, தறிபடுமோ' என்பது போலத்தான்! கடைசியில், மூலப் பிரதியே காணாமல் போனது இதன் உச்சக் காட்சி! என் அருமை நண்பர் பொன். தென் பாண்டியன் அவர்களின் இடைவிடாத ஊக்கத்தாலும், வற்புறுத்தலாலும், 'சிதிலமாகிப் போன பழைய ஏட்டுச் சுவடிகளிலிருந்து' பெயர்த்து எழுதுவதுபோல, பழைய நாட்குறிப்புகள், காகிதங்களிலிருந்து அரும்பாடுபட்டுப் பிரதியெடுத்தேன்!

இருட்டறையில் கிடந்த இதனை வெளியே கொண்டு வரக் கதவு தட்டியவர் என் அருமை நண்பர் கவிஞர் சிற்பி அவர்கள். வாயில் திறந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தவர் அன்பிற்குரிய பேராசிரியர் **ச. மெய்யப்பன்** அவர்கள். இதை அழகுறச் சீராட்டி உருவாக்கியவர் சகோதரர் க. நாராயணன் அவர்கள். 'ஓவியர்மணி' மணியம் செல்வன், இரா. குருமூர்த்தி ஆகியோர் இதற்குத் தம் பங்களிப்பினை ஆர்வமுடன் தந்தவர்கள். இப்பெரு மக்கள் அனைவர்க்கும் என் இதய நன்றிகள்.

3, இராமசாமி நகர்,
கோவை 641 030.

கட்டியங்காரன்
**புவியரசு**

## காவியப் பாத்திரங்கள்

**நெடுமாறன்**

(காவியத் தலைவன்; இளைஞன்)

தந்தைபழி முடித்திடவே துடித்த நெஞ்சன்
சிந்தையெனும் குரங்காலே அல்லற் பட்டோன்.

**அன்பரசு**

(நெடுமாறனின் நண்பன்)

சிறுவயது முதலாக நட்புக் கொண்டோன்;
உறுதுணையாய் மாறனின்பின் வந்து, சென்றோன்.

**நன்னன்**

(பொன்னாட்டு மன்னன்)

வஞ்சனையால் பொன்னாட்டைப் பெற்ற சூதன்;
நெஞ்செரியும் மக்கள்துயர் கேளாக் காதன்.

**மலர்க்கண்ணி**

(நன்னன் மணக்கவுள்ள சேரன் மகள்)

சிறைக்கிளியாய் நன்னனிடம் வாழ்ந்த பாவை;
பிறைநிலவை முழுநிலவாய்ச் செய்த பூவை.

**அருள்மலையடிகள்**

(அரச குரு)

அன்பென்னும் விளக்கேந்தி நின்ற தூயர்;
துன்புலகில் துளங்காத நெஞ்சர்; நேயர்.

**அறவாழி**

(நீதிமன்றத் தலைவர்)

வழிவழியாய் வருகின்ற நீதி என்றும்
வழுவாமல் காத்திடவே நினைத்த சான்றோர்.

**மணிவர்மன்**

(தளபதி)

மன்னவனின் படைத்தலைவன்; வேந்தன் ஓர்சொல்
சொன்னவுடன் பணிமுடிக்கும் கடமை வீரன்.

**வாணர்**

(அமைச்சர்)

நெடுநாளாய் அமைச்சர்பணி செய்தும், நன்னன்
கொடுமைகளைத் தணிப்பதிலே தோல்வி கண்டோர்.

மற்றும்...

ஏவலர்கள், காவலர்கள், ஊரார் போன்றோர்.
காவியத்தின் காலம்முடி யாட்சிக் காலம்.



"My Lord, the prelude has been played and now
The Curtain's up, the opera begins!"

— Morris L. West's
THE HERETIC

முதல் அங்கம்

# அந்திமாலை

**நன்னன்**

*சீச்சீ! இம் மக்களுக்கு மூளை யில்லை!*
*கூச்சலிட்டே தம்வலிமை இழப்பர். அவையீர்!*
*பெருங்குரலால் ஏசிடுவோர்க் கஞ்சேன். ஆனால்*
*உறுமௌனம் கொள்பவரே அஞ்சத் தக்கார்!*

**நெடுமாறன்**

மேதகைய நட்போடு அன்பு வேண்டேன்!
காதலதை எட்டிக்காய் போல்வெ றுப்பேன்!
எத்தகைய மகிழ்ச்சிக்கும் இடம்கொ டாமல்
சித்தத்தைக் கல்லாக்கி வஞ்சம் தீர்ப்பேன்!

## காட்சி : 1

களம் : **பூஞ்சோலை**

காலம் : **அந்திமாலை**

*[சோலை மண்டபம் ஒன்றில், நெடுமாறன் தூணில் சாய்ந்தவாறு அமர்ந்திருக்கிறான். புல்லாங்குழலிசை மெலிதாகத் தவழ்ந்து வரு கிறது. பறவைகள் கூடு திரும்பும் ஓசை, முதலில் குறைவாகவும், பின், படிப்படியாக மிகுதியாகவும் ஒலிக்கிறது. நெடுமாறன் யாரையோ எதிர் பார்த்து அமர்ந்திருக்கிறான் என்பது, அவன் அடிக்கடி இடப்பக்கம் திரும்பிப் பார்ப்பதிலிருந்து தெரிகிறது...வானம் மெல்ல மெல்லச் சிவப்பா கிறது...நெடுமாறன் சலிப்படைந்து தூணில் தலை சாய்த்துக் கண்கள் மூடிக் காத்திருக் கிறான்...அப்போது தொலைவில் குதிரையின் குளம்படியோசை கேட்கிறது...ஓசை அருகில் கேட்கும்போது, நெடுமாறன் நிமிர்ந்து அமர் கிறான்...ஓசை நிற்கிறது...நெடுமாறன் எழுந்து ஆவலுடன் இடப்பக்கம் பார்த்து நிற்கிறான்...]*

**நெடுமாறன்**

அன்பரசு! என்ன இது?...

[ஒரு சேவகன் வருகிறான். நெடுமாறன் முகத்தில் ஏமாற்றம்]

**சேவகன்**

வணக்கம் ஐயா!

**நெடுமாறன்**

அன்பரசு]அல்லவா! யார்நீ?

**சேவகன்**

ஐயா!
திடுமெனவே வந்ததற்கு மன்னித் தருள்க!
நெடுமாறன் என்பதுவும் தாங்கள் தாமோ?

**நெடுமாறன்**

நானேதான். என்செய்தி? யார் நீ?

**சேவகன்**

செய்தி
நானேதும் சொல்வதற்கு வந்தே னில்லை.
இம்மடலைத் தங்களிடம் சேர்க்கச் சொல்லி...

[தன் பையிலிருந்து ஓர் ஓலையை எடுத்து நீட்டுகிறான்...]

எம்தலைவர் ஆணையிட்டார். பெற்றுக் கொள்வீர்!

**நெடுமாறன்**

[ஓலையை வாங்கிக்கொண்டு அதைப் பிரிக்காமலேயே...]

யாவரவர்? எவ்வூரார்? என்ன செய்தி?

**சேவகன்**

சேவகன் நான். சேதிகளை அறிய மாட்டேன்.

[ஓலையினைச் சுட்டிக்காட்டி...]

ஏட்டினிலே சேதியுண்டு. விரித்துப் பாரும்!

நெடுமாறன்

வேட்கையினைத் தூண்டுகிறாய்!

[புன்முறுவலுடன் ஓலையைப் பிரித்த படி...]

சற்றே நில்லு!

[வானம் சிவக்கிறது. ஓலையைப் பிரித்த நெடுமாறன் அதைப் படிக்க, தன் வலப் பக்கம் திரும்பி, அந்திவான் ஒளியில் ஓலையைப் பார்க்கிறான்...அவன் மறு பக்கம் திரும்பியதும், சேவகன் ஓசைப் படாமல் பின்வாங்கி மெல்ல மறை கிறான். ஓலையைப் படிக்கும் நெடு மாறன் முகம் வியப்படைகிறது...தீவிர சிந்தனையில் மீண்டும் அதைப் படிக் கிறான். அப்போது அவன் நண்பன் அன்பரசு உள்ளே நுழைந்து, ஓலை படித்துக் கொண்டிருக்கும் நெடுமாற னைக் கவனித்து, புன்முறுவலோடு அவனை மெல்ல நெருங்க முயலும் போது...சேவகனிடம் ஏதோ கேட்க நெடுமாறன் சட்டெனத் திரும்பு கிறான்...]

காவலரே!

[எதிரில் அன்பரசு நிற்கக் கண்டு திடுக்கிட்டு...]

அன்பரசா?

அன்பரசு

காதல் ஓலை

ஆவலுடன் படிக்கையில்நான் கரடி யானேன்.
எத்தனைநாள் மறைத்தாலும் என்றோ ஓர்நாள்...

**நெடுமாறன்**

பித்தனைப்போல் உளறாதே! காதல் இல்லை
நெஞ்சினிலே கனல்மூட்டும் ஓலை தந்து...

**அன்பரசு**

பஞ்சாகப் பறந்துவிட்டான் ஒருவன்? மாறா!
காதலென்றால் அப்படித்தான்! மூடி வைத்து
வேதனையை விலைகொடுத்து வாங்கிச் சேர்த்து
இரவுபகல் நைவதுதான் வேலை! மற்ற
உறவுகளோ கைநழுவிப் போகும். உற்ற
நண்பனுக்கும் பொய்முகத்தைக் காட்டும்! காதல்
பண்பு அது! நீயென்ன செய்வாய் அப்பா!
இருக்கட்டும்! இருக்கட்டும்! இதனைப் பின்னே
சரிக்கட்டிக் கொள்கின்றேன்! முதலில் சொல்லு!
யாரந்தப் பூங்கொடியாள்? காதல் கன்னி
பேரென்ன? ஊரென்ன?

**நெடுமாறன்**

வாயை மூடு!
எப்போதும் உன்பேச்சு பெண்பேச்சுத்தான்!

**அன்பரசு**

தப்பேதும் இல்லை! இது பருவ மூச்சு!
காதலென்றால் முகஞ்சுழிக்கும் இளைஞர் ஓர்நாள்
சாவதற்கும் துணிந்திடுவார் போதை ஏறி.
நீமட்டும் விதிவிலக்கோ?

**நெடுமாறன்**

நண்பா! நெஞ்சில்
தீமூட்டும் ஓலையினைக் கையில் ஏந்தி
வேதனையில் வேகின்றேன்! வீணாய் என்னைச்
சோதனையேன் செய்கின்றாய்? காதல் ஊதல்
ஒன்றுமில்லை! நீயறிவாய். விளையா டாதே!
சென்றானே ஒரு வீரன் உனக்கு முன்னே...

**அன்பரசு**

பார்த்தேனே வரும்வழியில். என்ன சேதி?

**நெடுமாறன்**

பார் இதனை!

*[அன்பரசு ஓலையை வாங்கிப் படிக்கிறான். வானம் மெல்ல மெல்ல இருளத் தொடங்குகிறது...பின்பு பிறை நிலா தெரிகிறது...]*

**அன்பரசு**

''உன்வீரத் தந்தை பற்றி
மறைந்திருக்கும் இரகசியத்தை அறிய வேண்டின்
விரைந்திடுக ஓலைதனில் கண்ட வண்ணம்.
பொன்னாட்டுக் கோநகராம் புகழூர் தன்னில்
நன்னாளாம் கார்த்திகைநாள் உச்சிப் போதில்
வானுயர்ந்த அம்மையப்பர் கோயில் முன்னே
நானிருப்பேன்... செவ்வாடை பூண்டு, கையால்
உடைவாளின் பிடியதனைத் தொட்ட வாறே,
அடைந்திடுவேன்! உன்னைநான் கண்டு
கொள்வேன்!''

*[படித்து முடித்ததும் தலை நிமிர்ந்து நெடுமாறனைப் பார்த்துத் திகைப்புடன்...]*

என்நண்பா! நின்வளர்ப்புத் தந்தை கூட
உன்பிறப்பின் உண்மையினை அறிந்தி டாரோ?

**நெடுமாறன்**

ஒன்றுமவர் அறியாராம் கேட்டேன். சொன்னார்.
என்னையொரு சிறுமகவாய் யாரோ, வேங்கைத்
தோலதனில் சுற்றிவைத்துப் பொன்னும் வைத்து,
நீலமலைப் பாதையிலே இட்டுச் செல்ல

அவ்வழியே சென்றஅவர் எடுத்து வந்து
செவ்வையுடன் வளர்த்தாராம். என்ன அன்பு!
தாய்தந்தை முகமறியாப் பாவி யானேன்!

**அன்பரசு**

போய்மறைந்த வைபற்றிக் கலங்க வேண்டாம்!
நாமிருவர் புகழூர்க்குச் செல்வோம்! வீணாய்
நீமனதில் ஏன்கவலை வளர்க்கின் றாய்சொல்!

**நெடுமாறன்**

*[பெருமூச்சு விட்டு... கவலை தோய்ந்த குரலில்...]*

எனைவளர்த்த மெய்யப்பர் அன்பும், நெஞ்சம்
கனிகின்ற உன்நட்பும் அன்றி இங்கே
எனக்கென்ன இருக்கிறது! ஆனால், இன்றென்
மனக்குளத்தில் கல்லெறிந்த திந்த ஓலை.
சித்தமின்று அலையடித்துக் கலங்கும், நண்பா!
எத்தனைநாள் எத்தனைநாள் குழம்பி நின்றேன்!
பித்தனைப்போல் இரவுபகல் புலம்பி நின்றேன்!
இருள்விரித்த நெடுவழியில் தனியே செல்லும்
சிறுகுழந்தை போல்தவித்தேன்! பிறப்பின் மர்மம்
சிலந்திவலை போலென்னைச் சுற்றிச் சுற்றிக்
கலங்கியழச் செய்தகதை யெல்லாம், நெஞ்சின்
ஆழத்தில் புதைத்துவைத்தேன்! அனலில் வெந்தேன்!
நாளைவரும் வெளிச்சமென்றே காத்தி ருந்தேன்.
இன்றைக்குத் தான்வெள்ளி முளைத்த திங்கே.
என்றைக்கு விடியல்வரும் நண்பா?

**அன்பரசு**

மாறா!
துன்பத்தை ஏன்புதைத்தாய் நெஞ்சுக் குள்ளே?
இன்பத்தைப் பகிர்தல்தான் நல்ல தென்றா?
தோள்கனக்கும் பெருஞ்சுமையை இறக்கி வைக்க
நீள்வழியில் சுமைதாங்கிக் கற்கள் உண்டு.

மனச்சுமையின் பாரத்தைத் தாங்கிக் கொள்வோர்
எனைப்போன்ற நண்பரன்றோ? மறந்தா போனாய்?
தனிமையொரு ஆட்கொல்லி! துயரப் பாழில்
உனைத்தள்ளிக் குருடாக்கித் தவிக்க விட்டு
இறுதியிலே உயிர்குடிக்கும்! அறிவாய்! உண்மை
அறிவதிலே எனக்குமட்டும் இலையோ ஆவல்?
இதயத்தின் கதவுகளை மூடி வைத்தால்
உதயத்தின் ஒளியங்கே உதிப்ப தெங்கே?
தேடிவந்த என்நட்பு வாசல் நிற்க
மூடியதோர் கதவுக்குள் முடங்கிப் போனாய்!

**நெடுமாறன்**

மன்னிக்க அன்பரசு! வருந்து கின்றேன்!
என்பிழையை நீமனதில் வைக்க வேண்டாம்!
எனைவளர்த்த மெய்யப்பர் கருத்துக் கேட்க
உனையழைத்துச் செல்கின்றேன். அதற்குப் பின்னர்
தலைநகர்க்கு நாமிருவர் செல்வோம்!

**அன்பரசு**

உன்றன்
மலைபோன்ற துயரங்கே மடியும். வானில்
மீன்களிடை பிறைநிலவைப் பார்நீ! இந்த
மூன்றாம்நாள் இளம்பிறைதான் வளர்ந்தே தீரும்!
தேன்காயும் முழுநிலவாய் அமுதம் வார்க்கும்!
இருளென்றும் நிரந்தரமாய் இருப்ப தில்லை.
மருள்நீங்கும்! கவலைவிடு! செல்வோம் வா, வா!

[அன்பரசு ஓலையைத்தர, அதை வாங்கியபடி நெடுமாறன் சிந்தனையுடன் அவனைப் பின் தொடர்கிறான்]

—மேடை இருள்கிறது.

**காட்சி : 2**

களம் : **புகழூர் — தெரு**

காலம் : **நண்பகல்**

*[அம்மையப்பர் கோயிலுக்கு முன் செல்லும் பாதை. ஒரு மரநிழலில் நெடுமாறனும், அன்பரசும் வழி நடந்த களைப்புடன் நிற்கின்றனர்.]*

**அன்பரசு**

நெடுமாறா! இனியென்னால் முடியா தப்பா!
நெடியவழி நடந்திளைத்த துன்பம் தீர
இப்புன்னை மரநிழலில் ஓய்வு கொள்வோம்.

*[அன்பரசு மரத்தடியில் கிடக்கும் ஒரு கல்லின்மீது அமர்ந்து மரத்தின் மேல் சாய்கிறான்]*

**நெடுமாறன்**

எப்படியோ சொன்னவிடம் வந்து விட்டோம்

*[அவ்வழியாகக் கடந்து செல்லும் ஒருவரை நெருங்கி...]*

பெருந்தகையீர்! நல்வணக்கம்! அம்மை யப்பர்
திருக்கோயில் இதுதானோ?

**வழிப் போக்கர்**

ஆமாம் ஐயா!

**நெடுமாறன்**

அவ்வாறு தான்நினைத்தேன்; மகிழ்ச்சி; நன்றி!

**அன்பரசு**

எவ்வாறோ பெரும்பயணம் முடிந்த தப்பா!

[கோயிலில் உச்சிக்காலப் பூசைமணி ஒலிக்கிறது]

**நெடுமாறன்**

ஓலைசொலும் வேளையிது!

**அன்பரசு**

ஆனால் உன்றன்
ஓலைதனை எழுதியவர் எங்கே காணோம்?
வருவாரோ மாட்டாரோ? யார்கண் டார்கள்!
பெருவழியைக் கடந்திங்கு வந்த தெல்லாம்
வீண்செயலோ? யாரேனும் குறும்புக் காரன்
வேண்டுமென்றே செய்தவிளை யாட்டுத் தானோ?
செய்திகொண்டு வந்தவனைப் பிடித்து வைத்தே
ஐயமின்றிக் கேட்காமல் விட்டு விட்டு
வேலையின்றி ஓலைதனை நம்பி வந்தோம்
காலைமுதல் வெறும்வயிறாய்க் காய்ந்து நின்றோம்.
தொல்லைபற்றிக் கவலையிலை; வந்தால் நன்று.

**நெடுமாறன்**

இல்லையில்லை வந்திடுவார்.

[தொலைவில் பார்த்து...]

ஆகா! பார் பார்!

[கட்டான உடல் படைத்த பெரியவர் ஒருவர் செவ்வாடை அணிந்தவராய் வருகிறார். அவரது இடக்கை, இடையில் தொங்கும் உடைவாளின் மீதிருக்கிறது. நெடுமாறன் முகத்தில் மகிழ்ச்சி]

முத்தரையர்

நெடுமாறா! குறித்தவிதம் வந்து விட்டாய்!

நெடுமாறன்

கடமையன்றோ? எங்கேயென் தந்தை ஐயா?

முத்தரையர்

உன்னுள்ளே இருக்கின்றார் தந்தை. ஆ! ஆ!
அன்னவனின் எழிலுருவம் கண்டேன் உன்னில்
'பொன்முடி'யின் உயர்பண்பைக் கண்டேன் உன்னில்!

நெடுமாறன்

என்சிறப்புக் கிடக்கட்டும். தந்தை எங்கே?
அச்செய்தி அறியவன்றோ வந்தேன் இங்கே?
நிச்சயம்நீர் சொல்லிடுவீர் அன்றோ? சொல்லும்!

முத்தரையர்

அவசியம்நான் சொல்லிடுவேன். தனித்துச்
செல்வோம்.

நெடுமாறன்

இவனென்றன் உயிரொத்த நண்பன்; எம்மில்
மறைவொன்றும் இதுவரையில் இருந்த தில்லை.
நிறைவோடென் குறைபோக்கத் துணையாய்
வந்தான்.
ஒருவயிற்றிற் பிறந்தாரைப் போன்ற எம்முள்
கரவேது? பிரிவேது? சொல்லும்!

முத்தரையர்

ஆனால்
உனக்குமட்டும் அறிந்திருக்க வேண்டும் செய்தி.
அனுப்பிவிடு நண்பனைத்தான் அப்பால்; சொல்வேன்.

நெடுமாறன்

[தயக்கத்துடனும் வருத்தத்துடனும்...

நண்பாநீ...

**அன்பரசு**

கவலைவிடு! அப்பாற் செல்வேன்.
[நண்பனின் காதருகே மெல்ல...]
நண்பாஇம் மனிதனிடம் எச்ச ரிக்கை!
[அன்பரசு செல்கிறான்]

**நெடுமாறன்**

சொல்லுமையா! தந்தையினைப் பற்றிச் சொல்லும்!
எல்லையிலா ஆவலுக்கே அணையைப் போட்டு
நிற்கின்றேன்; எனைக்காக்க வைக்க வேண்டாம்!
கொற்றவனோ என்தந்தை?

**முத்தரையர்**

அவரில் மேலோன்.
ஈடுசொல்ல முடியாத வீரத் தாலே
நாடுபுகழ் பெருங்கருணைப் பண்பி னாலே
பாவலரின் பாடல்களில் புகழாய் நின்றோன்!
மேவுகின்ற இவ்வுலக வாழ்வை நீத்தோன்!

**நெடுமாறன்**

ஐயோ!என் தந்தையவர் போய்விட் டாரா?
ஐயா!நீர் இதையுரைக்கத் தானோ வந்தீர்?
அள்ளுமெழில் குயிற்பாடல் கேட்க வந்தேன்.
நள்ளிரவின் ஆந்தையன்றோ அலறக் கேட்டேன்.

**முத்தரையர்**

துன்பம்விடு! சென்றதெண்ணிக் கலங்கி நின்றால்
முன்னுள்ள பெருங்கடமை என்ன வாகும்?
இப்புகழூர்த் தென்றிசையில் தனித்து நிற்கும்
ஒப்பரிய கற்கோட்டைத் தலைவன், என்பேர்
முத்தரையன்! நின்தந்தை நண்பன்...

**நெடுமாறன்**

ஐயா!
தத்தளிக்கும் மனத்தோடு நிற்கின் றேனே!
எனைப்பெற்ற தந்தையினைப் பற்றிச் சொல்வீர்!

**முத்தரையர்**

உனைப்பெற்றோன் இப்பொன்னாட் டரசன்; இந்தப்
புகழூரின் அரியணைமேல் வீற்றுச் செங்கோற்
புகழ்மணக்க நல்லாட்சி செய்தோன்; வந்த
மாற்றலரைப் போர்க்களத்தில் பதரைப் போலத்
தூற்றிவிட்டுப் புறங்காட்டி யோடச் செய்தோன்;
பெருவீரன்; 'பொன்முடி'யாம் பெயரைக்
கொண்டோன்;
ஒருவருக்கும் தீங்கெண்ணாக் கருணை நெஞ்சன்...

**நெடுமாறன்**

அத்தகையோர் எந்தவிதம் மாய்ந்தார்?

**முத்தரையர்**

சொல்வேன்.
வேற்றவரும் போற்றியநின் வீரத் தாதை
சீற்றமுடன் சமர்க்களத்தில் பாய்ந்து, சூறைக்
காற்றெனவே வாள்சுழற்றிப் பொருத வேளை
மாற்றரசன் மாவளத்தான் கையிற் சிக்கி
உயிரிழந்தார், சூழ்ச்சியினால்!

**நெடுமாறன்**

ஆ! ஆ! தந்தை
உயிர்குடித்த மாவளத்தான் இருக்கின் றானா?
பேயனவன் இவ்வுலகில்...

**முத்தரையர்**

இல்லை தம்பீ!
போயொழிந்தான் அன்னவனும் சிலநாள் முன்னர்.

**நெடுமாறன்**

செத்தானோ என்பகைவன்: அந்தோ, சாவே!
இத்தனைநாள் காத்திருந்தாய்! இன்னும் சற்றே
பொறுத்திருந்தால் வஞ்சமதை முடித்தி ருப்பேன்.
வெறுத்தேனிவ் வாழ்வதனை! யானும் சாவேன்!

**முத்தரையர்**

நெடுமாறா! பொறுமைகொள்! தந்தை தம்மை
அடுபோரில் சூழ்ச்சியினால் காட்டித் தந்தோன்
உயிரோடிவ் வுலகினிலே உள்ளா னப்பா!

**நெடுமாறன்**

*[ஆத்திரம் பொங்க...]*

நயவஞ்சச் சிறுநரியான் யார்?யார்? சொல்வீர்!

**முத்தரையர்**

பதவிக்குப் பல்லிளித்த பதவிப் பித்தன்;
உதவுபவன் போற்கெடுத்த சூழ்ச்சிக் காரன்;
பன்றியைப்போல் உடல்கொழுத்த வஞ்சன்; சற்றும்
நன்றியுணர் வில்லாதோன்; நாயிற் கீழோன்;
உடன்பிறந்தே கொல்லும்நோய் போன்றோன்.
அந்தோ!
நன்றியற்ற இப்பாழும் உலகந் தன்னில்
நன்மைதரும் அருட்கனியை வேண்டி, நல்ல
அன்புவிதை விதைத்தாலும், துரோகந் தன்னை
அன்றோநாம் பறிக்கின்றோம்!

**நெடுமாறன்**

எங்கே அந்த
இழிகுலத்தோன்? பழிவாங்கித் தீர்த்தே ஓய்வேன்!

**முத்தரையர்**

இழிமகனைக் காட்டுகிறேன்.

**நெடுமாறன்**

ஆ! ஆ! காட்டும்!

*[எங்கோ பார்த்தபடி]*

நன்றிகொன்ற நாய்மகனே! இருக்கின் றாயா?
கொன்றழிக்க வந்துவிட்டான் மாறன்.

[துயரக் குரலில்]

ஐயோ!

என்தந்தை உனக்கென்ன துன்பந் தந்தார்?
அன்னவரின் உயிர்கொடுத்தே என்ன பெற்றாய்?

**முத்தரையர்**

அளவற்ற பெருநிதியம் பெற்றான்; இன்றே
உளமகிழ வாழ்கின்றான், குறையே யின்றி.

**நெடுமாறன்**

எவைபெற்றுப் பொலிவுற்றே இருந்திட் டாலும்,
அவைநடுவே அரியணையில் வீற்றிட் டாலும்,
மலைமுகட்டில் கோட்டைகட்டி வாழ்ந்திட் டாலும்,
அலைகடலின் அடியினிலே ஒளிந்திட் டாலும்,
வேலெடுத்த மறவர்நடு நின்றிட் டாலும்,
வாளெடுத்து நடுப்புகுந்து வெட்டிச் சாய்த்தே
உடைவாளின் பெருந்தாகம் தீர்த்துப் பின், என்
உடைவாளுக் கென்னுயிரைப் பரிசாய் ஈவேன்!

**முத்தரையர்**

முட்டாளே! பழிதீர்க்கும் முறையா இஃது?
சட்டென்று கொல்லுவதால் பயனே இல்லை.
நீகொல்லா விட்டாலும் அவனும் ஓர்நாள்
சாகத்தான் போகின்றான். ஆக, உந்தை
துரோகத்தால் மனம்வருந்தி மாய்ந்த தைப்போல்
துரோகத்தால் வஞ்சித்துக் கொல்ல வேண்டும்.
அதற்குவழி யானுரைப்பேன்; கவலை வேண்டாம்.
சதிகாரன் மாளிகையில் பணியா ளாகச்
சேர்ந்தவனை அடுத்திருந்து பணிந்து, தாழ்ந்து,
சேர்ந்துணவு உட்கொண்டு, பேசி, உற்ற
துன்பமதைத் துடைத்துநம் பிக்கை யூட்டி,
அன்புகொள நடித்திருக்க வேண்டும் தம்பீ!

**நெடுமாறன்**

வஞ்சமகன் மனைச்சோற்றை உண்ப தாநான்?
நெஞ்செரியும்; வயிறெரியும்; குடலும் வேகும்!
வேம்பதனை உண்டிடவா ஐயா?

**முத்தரையர்**

மாறா!
வேம்பதனைக் கரும்பாக்கும் மனிதன் எண்ணம்!
வஞ்சமதைத் தீர்த்திடவே வந்தோம் என்று
நெஞ்சமதில் நினைத்திருந்தால், வேம்புண் டாலும்
இனித்திருக்கும்; தடைகளெல்லாம் கதிரைக் கண்ட
பனித்திரைபோல் மாய்ந்துவிடும்: அதனால் நீயும்
அவனுடனே மிகநெருங்கி இன்ப மூட்டி
அவனுடைய தேவையெலாம் முடித்துத் தந்து
காத்திருந்து காலமது கனியும் போது...

[என்று அவர் சொல்லும்போது மாறன், கையால், இடையிலுள்ள உடைவாளைத் தட்டிக் காட்டுகிறான்]

ஆத்திரத்தால் அறிவிழக்கும் உன்னை நம்பேன்.
துடிதுடிக்கும் இளங்குருதி பாயும் நெஞ்சம்
அடங்காது கட்டுபாட் டிற்கு. உன்போல்
மனவடக்கம் இல்லாதோர் அரிய செய்யார்.
நினைத்தபழி எவ்வாறு முடிப்பாய் தம்பி?

**நெடுமாறன்**

என்னைநீர் நன்கறியீர்; சொல்லு மையா!
சொன்னமொழி தவறாது நடப்பேன்; உண்மை!

**முத்தரையர்**

வேளைநன்கு கனிகின்ற போது நானோர்
ஆளிடத்தில் செய்திதந்தே அனுப்பி வைப்பேன்.

**நெடுமாறன்**

எந்தவிதம் அப்பதரைக் கொல்வேன்? சொல்வீர்!

**முத்தரையர்**

அந்தநாள் மிகவிழிப்பாய் இருந்து, மாலை
வந்தவுடன் நெஞ்சுருகப் பேசி, உள்ளம்
நொந்தவனைப் போல்நடித்துப் பின்னர், மெல்லப்
பள்ளியறை எவ்வாறோ நுழைய வேண்டும்.
நள்ளிரவில் துயிலெழுப்ப வேண்டும். தீயோன்
துள்ளியெழும் வேளைதனில் உன்றன் வாளை
கழுத்தருகே இப்படிநீ வைக்க வேண்டும்.

*[நெடுமாறனின் கழுத்தருகே கை வைத்துக் காட்டுகிறார்.]*

விழித்துமிகத் திடுக்கிட்டுத் திகைக்கும் போதில்
நின்பழியின் காரணத்தைக் கூறல் வேண்டும்.
பின்னவனை வேண்டுமென்றே ஆசை யூட்டி
'உன்னுயிர்க்குப் பொன்விலையாம்' என்று சொல்லு!
'என்னுடைய செல்வமெலாம் தந்தேன்' என்பான்
'நாய்மகனே! உன்செல்வம் எனக்குத் தூசு!
போய்விடுநீ!', என்றவுடன் வெட்டிப் போடு!
என்றாலும் ஒன்றினைநீ மறத்தல் வேண்டாம்.
என்ஆணை கிடைக்கும்முன் எந்த வேளை
வாய்ப்பாக அமைந்தாலும், சினம்மூண் டாலும்
பேய்மகனைச் சாய்க்காதே! மறந்தி டாதே

**நெடுமாறன்**

இடர்வரினும் சூள்முடிப்பேன்; வாள்மேல் ஆணை!

**முத்தரையர்**

உடைந்திடுமோர் வாள்மீதா ஆணை யிட்டாய்?

**நெடுமாறன்**

எந்தையவர் புதைகுழியின் மேலே ஆணை!

**முத்தரையர்**

உந்தையுள்ள புதைகுழியா? எங்கே யப்பா?
அதைக்கேள்நீ! தந்தையவர் உடலைச் சுட்டுக்

*காற்றினிலே தூவிவிட்டார்! தலையை வெட்டி*
*நாற்சந்தி தனில்வைத்து ஓலை செய்த*
*புன்முடியைச் சூட்டிவைத்தே இழிவு செய்யப்*
*பொன்முடியார் போய்மறைந்தார்!*

**நெடுமாறன்**

*கொடுமை! அந்தோ!*
*என்தந்தை உயிரின்மேல் ஆணை யிட்டேன்!*
*அன்னவரின் மனத்துயர்மேல் ஆணை யிட்டேன்!*
*அவர்மறையக் காரணமாம் துரோகந் தன்மேல்*
*ஆணையிட்டேன்! காத்திருப்பேன்! பின்னர், உங்கள்*
*ஆணையது கிடைத்தவுடன் வஞ்சந் தீர்ப்பேன்!*
*சொல்மாறேன்; இதுவுறுதி!*

**[முத்தரையர் இடையிலிருந்த வாளைக் கையிலெடுக்கிறார்...]**

**நெடுமாறன்**

*என்ன! வாளா?*

**முத்தரையர்**

*நல்லவனே! இதுவுன்றன் தந்தை யின்வாள்!*

**நெடுமாறன்**

*கொடுங்களதை! உயிர்போலக் காப்பேன்! ஆ! ஆ!*
*கொடுமனத்தான் உயிரிதற்கே உணவாய் ஈவேன்!*

**முத்தரையர்**

*இப்போது தரமாட்டேன்! பொறுமை கொள்க!*

**நெடுமாறன்**

*திண்மைமிகு கைப்பிடியில் வேங்கைச் சின்னம்*
*கண்டவுடன் பழம்நினைவு கொண்டேன் ஐயா!*
*வேதனையால் என்தந்தை இறுதி நாளில்*
*ஏதேனும் செய்திசொல்லி யிருப்பார் அன்றோ?*

**முத்தரையர்**

மெய்தளர்ந்து கொடுஞ்சிறையில் இருந்த போது
செய்தியுடன் இவ்வாளை அனுப்பி வைத்தார்.

**நெடுமாறன்**

என்னசெய்தி?

**முத்தரையர்**

நெடுமாறா! அந்த நாளில்
நின்அன்னை உறையூரில் இருந்தார். நின்னைப்
பெற்றசெய்தி யானறிந்து சிறைக்குச் செய்தி
உற்றதொரு ஆள்மூலம் சொல்லி விட்டேன்.
அவ்வமயம் அம்மனிதன் மூலம் உந்தை,
"இவ்வமயம் மகன்பிறந்த சேதி கேட்டே
எல்லையிலாப் பெருமகிழ்வு பெற்றேன்; ஆனால்
தொல்லைமிகும் இத்துன்பம் நீங்க, என்னைக்
கொன்றிடவே உள்ளாராம். நன்று. தாங்கள்
என்மகனும் காளையென வளரும் போது
வஞ்சமது தீர்த்திடவே செய்வீர்!" என்று
நெஞ்சுருகச் சொல்லிவிட்டார்; விரைவில் மாய்ந்தார்.
அக்கொடுமை கேட்டவுடன் அவரைத் தேடி
அக்கணமே நின்அன்னை உயிரை விட்டார்.
என்செய்வேன்? நினைவளர்த்தால் ஐயம் நேரும்
என்றெண்ணி மெய்யப்பர் கையில் உன்னைச்
சேர்த்திடவே வழிசெய்தேன்; உற்ற காலம்
பார்த்திருந்தேன்! பழிதீர்க்கும் வழியும்
சொன்னேன்!

**நெடுமாறன்**

ஐயோநான் ஏன்பிறந்தேன்? துன்பம்! துன்பம்!
ஐயாஎன் நன்றியினை ஏற்றுக் கொள்வீர்!
கொலைகாரன் யாரெனவே சொல்வீர்! கொல்வேன்!

[பொன்னாட்டு மன்னன் நன்னனும், அவையினர் சிலரும் கோயிலின் முன் வருகின்றனர்.]

**முத்தரையர்**

கொலைகாரன் பெயரெதற்கு? அவனே வந்தான்!

**நெடுமாறன்**

*[சட்டெனக் கையால் உடைவாளைப பற்றி...]*

மன்னவனா?

**முத்தரையர்**

(மெல்ல) எடுகையை வாளை விட்டு
சொன்னதெலாம் மறந்தாயோ?

*[சற்று முன் நகர்ந்து மன்னரின் முன் மண்டியிட்டுப் பணிந்து...]*

மன்னர் வாழ்க!

**நன்னன்**

முத்தரையா! நலந்தானா? முன்ன ரெல்லாம்
நித்தநித்தம் அவைவருவாய் மறந்தாய் போலும்!

*[நெடுமாறனைப் பார்த்து...]*

யாரிந்த இளம்பிள்ளை?

**முத்தரையர்**

தங்கை பிள்ளை.
வீரமுடன் போரிட்வே வல்லான்; நல்லான்.
அரண்மனையிற் சேர்த்திடவே அழைத்து வந்தேன்.

**நன்னன்**

சிறுபிள்ளை. இருக்கட்டும். இவன்பேர் என்ன?

**முத்தரையர்**

நெடுமாறன் மன்னவரே!

**நன்னன்**

நன்று! நன்று!
நெடுநாட்கு முன்பிருந்த ஒருவன் சாயல்

இவன்முகத்தில் நிழலாடக் கண்டேன். ஆனால்,
அவன்மனைவி பிள்ளையுடன் செத்துப் போனாள்!

[நெடுமாறனை நோக்கி...]

பிள்ளாய்நீ அரண்மனைக்கு வருகின் றாயா?
துள்ளுகின்ற இளம்பருவம்! துடிக்கின் றாயே!
பொறுமைமிக வேண்டுமடா வீரா! வீரன்
பொறுமையினைக் கைவிட்டால் வெல்லான்!
தோற்பான்!
பகைவரின்முன் புன்முறுவல் பூத்து நின்றே
உகந்ததொரு வேளையினில் வீழ்த்த வேண்டும்.

**நெடுமாறன்**

[வாய்க்குள்ளே...]

பொறுக்கின்றேன், பொறுக்கின்றேன், நச்சுப்
பாம்பே!

**நன்னன்**

பொறுமைமட்டும் போதாது. சூழ்ச்சி செய்யும்
திறமையதும் மிகவேண்டும். இன்றேல் தொல்லை.
பசுத்தோலைப் போர்த்தபுலி வெல்லும்; கொல்லும்!

**நெடுமாறன்**

[வாய்க்குள்ளே...]

பசுத்தோலைப் போர்த்துவிட்டேன்! கொல்வேன்.
வெல்வேன்!

**நன்னன்**

நாளைமுதல் நீயென்றன் மெய்காப் பாளன்.

**முத்தரையர்**

வாளையெடுத் தடிபணிக மன்னர் தம்மை!

[நெடுமாறன் வேண்டா வெறுப்புடன்
வாளை உருவி மன்னனின்முன் மண்டி

*யிட்டுப் பணிகிறான். நன்னன் அவை யினருடன் உரையாடியவாறே கோயி லுக்குள் செல்கிறார். அவர்கள் சென்ற பின்...]*

**நெடுமாறன்**

*குலவைரி முன்னோநான் குனிந்து நின்றேன்!*

**முத்தரையர்**

*பலமுறைநீ இதனையினிச் செய்தல் வேண்டும்!*
*இன்றிரவு அரசாங்க விடுதி செல்க.*
*சென்றதெலாம் மறந்துவிட்டு முன்னே யுள்ள*
*பெருங்கடமை தனையெண்ணி, நன்னன் தன்னை*
*நெருங்கிடவே கிடைத்ததொரு வாய்ப்பை நன்கு*
*பயன்படுத்திக் காத்திருநீ! வேளை வந்தால்*
*கயவனைத்தான் தீர்த்திட்டு வஞ்சம் தீர்ப்போம்!*

*(தொலைவில் பார்த்து)*

*வந்துவிட்டான் உன்நண்பன். இனிமேல் அவனும்*
*உந்தனுக்குத் துணையாகான். அவனை இன்றே*
*இவ்வூரி னின்றுமட்டும் அன்றி, உன்றன்*
*செவ்வைமிகு நெஞ்சினின்றும் நீக்கு!*

**நெடுமாறன்**

*என்ன!*
*நெஞ்சினின்று நீக்குவதா? நண்ப னன்றோ!*

**முத்தரையர்**

*வஞ்சமொன்றே நட்புனக்கு! வேறொன் றில்லை!*
*எப்படியோ அனுப்பிவிடு! கடமை முன்னே!*

**நெடுமாறன்**

*(துயரம் தோய்ந்த முகத்துடன்)*

*அப்படியே ஆகட்டும். நட்பைக் கொல்வேன்.*

[முத்தரையர் விரைந்து மறைகிறார்.
அன்பரசு சிரித்தபடியே வருகிறான்.]

அன்பரசு

நெடுமாறா! அடடாநான் என்ன சொல்வேன்!
நெடுமனையொன் றில்புகுந்து குடிநீர் கேட்டேன்.
மானனைய எழிற்கன்னி யொருத்தி வந்து
தேனனைய பானகத்தைத் தந்தாள். நானும்
ஆவலுடன் அதைக்குடித்து நன்றி சொல்லக்
கோவையிதழ் முறுவலினால் என்னைக் கொன்றாள்!

[நெடுமாறனின் வெறித்தமுகம் நோக்கித்
திடுக்கிட்டு...]

நெடுமாறா! என்ன இது? பித்தன் போலே
நெடுமரத்தின் கிளைபார்த்து நிற்கின் றாயே!
அக்கிழவன் என்னசொன்னான்?

நெடுமாறன்

அருமை நண்பா!
இக்கணமே நாமிருவர் பிரிதல் வேண்டும்.

அன்பரசு

நம்மிடையே பிரிவென்ற பேச்சே தப்பா!
சும்மாநீ விளையாட்டாய்...

நெடுமாறன்

இல்லை நண்பா!
மெய்யாக நாம்பிரிதல் வேண்டும். உன்பால்
பொய்யுரையேன். போய்விடுநீ, இன்றே ஊர்க்கு!

அன்பரசு

கிழக்கோட்டான் ஏதேதோ சொல்லி யுன்னைக்
குழப்பிவிட்டான். என்றாலும் கவலை வேண்டாம்.
போகவெனைச் சொல்லியபின் எங்கே செல்வாய்?

போகமட்டும் சொல்லாதே! இன்பம் துன்பம்
இரண்டினையும் ஒன்றாகப் பகிர்ந்து கொள்வோம்.
வருவதென்ன வானாலும் துணிந்தே ஏற்போம்!

**நெடுமாறன்**

இல்லையில்லை! நான் தனியே ஆற்ற வேண்டும்
தொல்லைமிகு பெருங்கடமை மலைபோல் உண்டு.

**அன்பரசு**

எல்லையிலாத் துயரெனினும் முடிப்போம் சேர்ந்தே.
இன்பத்தைப் பகிர்ந்திடவா நட்புக் கொண்டோம்?
துன்பத்தில் துணைநிற்க அன்றோ வந்தேன்!

**நெடுமாறன்**

அன்பரசு! வீண்பேச்சு வேண்டாம். போபோ!
என்றுமெனை மறந்துவிடு!

**அன்பரசு**

என்ன மாறா!
சற்றுமுன்னே அன்புருவாய் இணைந்து நின்றோம்.
உற்றதென்ன சிறுபொழுதில்? கொடுமை! ஐயோ!
கற்றதெல்லாம் மறந்தாயோ?

**நெடுமாறன்**

போதும். போபோ!

**அன்பரசு**

நட்புக்கே இலக்கியமாய் இருந்தோ மன்றோ?
நட்பென்ன நீர்க்குமிழி போன்ற தொன்றோ!

**நெடுமாறன்**

வீண்பேச்சேன்? நட்பெதுவும் நமக்குள் இல்லை!

**அன்பரசு**

[நிலைதடுமாறி, அதிர்ந்து]
காண்பதெலாம் மெய்தானா? கனவா? தீய
நன்றியிலார் போலமிகப் பேச வேண்டாம்!

**நெடுமாறன்**

நன்றியிலாப் பதரென்றே எண்ணிக் கொள்நீ.
சென்றுவிடு! மேன்மேலும் பேச்செ தற்கு?

**அன்பரசு**

செல்கின்றேன். மெய்யப்பர்க் கென்ன சொல்வேன்?

**நெடுமாறன்**

வல்லவனாய் வளர்த்ததற்கு நன்றி சொல்லு.
'எல்லாமோர் பழங்கனவாய் உதறி விட்டுப்
புதுவாழ்வை ஏற்றுவிட்டான்!' என்று கூறு!

**அன்பரசு**

புதுவாழ்வா ஏற்றுவிட்டாய்? இல்லை யில்லை!
பேரிடரில் வீழ்ந்துவிட்டு மறைக்கின் றாயே!
வீரமது நின்துணையாய் இருத்தல் எண்ணிச்
செல்கின்றேன் நெடுமாறா!

**நெடுமாறன்**

போய்வா நண்பா!

*[அன்பரசு மிகுந்த துயரத்தோடு மெல்லச் செல்கிறான். அவன் மறைந்த பின் நெடுமாறன் கண்ணீர் விட்டுக் கைகளில் முகம் புதைத்து விம்முகிறான். முத்தரையர் வெளிப்படுகிறார்...]*

பெரியவரே, பெருங்கொடுமை செய்யச் செய்தீர்.
அரியதொரு நட்பதனை வெட்டச் சொன்னீர்.
பிற்பகலின் நிழலாக வளரும் நட்பை
முற்பகலின் நிழலாகச் செய்து விட்டீர்!
அந்தோநான் நண்பனுளம் சிதைத்த வஞ்சன்.
சிந்தைநிறை வுற்றீரா ஐயா?

**முத்தரையர்**

ஆமாம்!

மறவாதே! காலமது கனியு மட்டும்
உறவாக நடித்திருநீ!

*[உடைவாளை எடுத்துத் தூக்கிப் பிடித்து...]*

வஞ்சம்! வஞ்சம்!

[என்று சொல்லிவிட்டுச் சென்று மறைகிறார். நெடுமாறன் சிறிது திகைத்திருந்து பின், தன் உடைவாளைக் கையிலெடுத்து அம்மையப்பர் கோயிலைப் பார்த்தவாறு பேசுகிறான்...]

**நெடுமாறன்**

எனையீன்ற தாயின்மேல் ஆணை! அன்றே
எனைநம்பி உயிர்நீத்த தந்தை செந்நீர்
மீதினிலே ஆணையிட்டேன்! வஞ்சந் தீர்ப்பேன்!
ஏதிடர்கள் மேல்வரினும் அஞ்சேன்; என்ன
இன்பங்கள் கிடைத்தாலும் தூசாய் எண்ணி
வன்மனத்தோ டிருந்திடுவேன்! சுவைக்க மாட்டேன்!
மேதகைய நட்போடு, அன்பு வேண்டேன்!
காதலதை எட்டிக்காய் போல்வெறுப்பேன்!
எத்தகைய மகிழ்ச்சிக்கும் இடம் கொடாமல்
சித்தத்தைக் கல்லாக்கி வஞ்சந் தீர்ப்பேன்!
கலங்கேன்நான்! இதுவுறுதி...

[அப்பொழுது அழகிய சித்திரத் திரையிட்ட பல்லக்கொன்று அவ்வழியே வருகின்றது. கோயிலின் முன் தெருவில் கீழே வைக்கப் பட்டவுடன், பேரழகி ஒருத்தி இறங்கிச் செல்கிறாள்.

நெடுமாறன் திகைப்புடன் அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, அவ்வழியாகச் செல்லும் ஒருவரை நோக்கி...]

அவள்யார் ஐயா?

**வழிப்போக்கன்**

மலர்க்கண்ணி! பொன்னாட்டின் அரசி ஐயா!

[நெடுமாறன் திகைப்புடன் நிற்கிறான்]

— திரை.

## காட்சி : 3

களம் : **அரசவை**

காலம் : **பகல்**

*[பொன்னாட்டுத் தலைநகராகிய புகழூர் அரசவை கூடியிருக்கிறது. மன்னன், அமைச்சர் முதலானோர் தத்தம் இடத்தில் அமர்ந்திருக்கின்றனர். அரியணையின் அருகே நெடுமாறன் கைகட்டி நிற்கிறான். வெளியேயிருந்து, ''கொடுங்கோன்மை வீழ்க!'' ''மன்னர் ஒழிக!'' என்ற மக்கள் குரல் கேட்கிறது.]*

**நன்னன்**

வாய்கிழியப் போடுகின்றார் வரட்டுக் கூச்சல்!
நாய்களைப்போல் ஊளையிட்டால் வருமோ
எல்லாம்?

**மணிவர்மன்**

*[வெளியே எட்டிப் பார்த்து...]*

வெள்ளம்போல் திரண்டுவிட்டார் மன்னா!
என்சொல்
எள்ளளவும் கேளாராய்க் குலைக்கின் றார்கள்.

**நன்னன்**

சீச்சீ!இம் மக்களுக்கு மூளை யில்லை.
கூச்சலிட்டே தம்வலிமை இழப்பர். அவையீர்!

பெருங்குரலால் ஏசிடுவோர்க் கஞ்சேன். ஆனால்
உறுமௌனம் கொள்பவரே அஞ்சத் தக்கார்!

[வெளியிலிருந்து பெரும் ஓசை எழுகிறது]

இத்தனைநாள் முணுமுணுத்தார் பொறுத்தேன்.
இன்று
மெத்தவுமே பண்மாறிப் பாடு கின்றார்.
சுவையில்லை அவர்பாட்டில். பண்ணை மாற்றி
அவைக்கேற்ற வண்ணமவர் பாட வேண்டும்.
மணிவர்மா! போயிசையை மாற்று! இன்றேல்
அணியாம்நம் படைவலிமை காட்டு! வாட்டு!

[மணிவர்மன் அவையை விட்டு வெளி யேறுகிறான்]

**அருள்மலையடிகள்**

மக்களுக்கு மன்னன்செவி சாய்க்க வேண்டும்.
எக்குறைகள் உண்டெனவே கேட்பாய் நன்னா!

**நன்னன்**

குடிகளெலாம் ஆட்டுமந்தைக் கூட்டம். தூய
அடிகள்நீர் இஃதறியீர்......

[திடீரென வெளியிலிருந்து பெரிய ஆரவாரம் கேட்கிறது]

என்ன? என்ன?

**நெடுமாறன்**

[விரைந்து சென்று வெளியே எட்டிப் பார்த்து......]

நம்மரசி மக்களிடை! ஆ! ஆ! வீரர்
தம்மையெலாம் தடுக்கின்றார் நடுவே நின்று!

**நன்னன்**

பேய்பிடித்து விட்டதுவா அவளுக் கின்று?
நாய்களுக்குப் பரிந்துரைக்கப் போய்விட் டாளா ?

**நெடுமாறன்**

வருகின்றார் ஒருகூட்டம் பின்னே சூழ.

**வாணர்**

*[எட்டிப் பார்த்து...]*

வருகின்றார் அவைநோக்கி நீதி கேட்க!

**நன்னன்**

*[மெல்ல...]*

அட இறைவா! என்ன இது?

*[மலர்க்கண்ணி பத்துப் பதினைந்து குடிமக்களோடு அவைக்குள் நுழை கிறாள்]*

கதவைச் சாத்து!

*[மணிவர்மனும் காவலன் ஒருவனும் விரைகின்றார்கள்...]*

**மலர்க்கண்ணி.**

அடிபணிந்தேன் பெருமானே! குறைகள் கேட்பீர்!

**நன்னன்**

கந்தலுடைப் பஞ்சையரைக் கூட்ட மாகச்
செந்திருவாழ் அவைக்குள்ளே அழைத்தேன் வந்தாய்?
எனக்கென்ன உடைதைக்கும் தொழிலா?

**மலர்க்கண்ணி**

வேந்தே!
மனக்கல்லை உருக்கிடுமே இவர்கள் தோற்றம்.
கேட்டிடுவீர் இவர் துன்பம்!

**நன்னன்**

(வெறுப்புடன்) என்ன சொல்லு!

**மலர்க்கண்ணி**

ஒன்றிரண்டோ இவர் துயரம்? சொல்லித் தீரா!
மின்னுகின்ற பட்டுடுத்தே அணியும் பூண்டு

மேனிலையில் வாழுகின்ற அவையீர்! வேந்தே!
கானுலவும் விலங்குகளின் கீழாய்த் துன்பக்
காரிருளில் சிக்கிவழி காணா ராகிப்
பேரிடரில் வீழ்ந்துமிகத் தவிக்கின் றாரே!
உண்ணுதற்குக் கஞ்சியின்றித் தவிட்டைத் தின்றுக்
கண்மூடி உயிர்விட்டோர்க் களவே இல்லை.
நாள்தோறும் பசிச்சாவு!

முதல் குடிமகன்

ஆமாம் வேந்தே!
நாள்தோறும் சாகின்றோம். காப்பீர் எம்மை!

நன்னன்

தவிட்டுணவில் சத்துளது, அன்றோ? இந்தத்
தவிடன்றோ பசுக்களுக்கு வைக்கின் றோம்நாம்?

மலர்க்கண்ணி

காலத்தின் கோலத்தால் கேணி, ஏரி
குளங்களெலாம் வற்றினவே! என்ன செய்வார்?
குடிப்பதற்கும் நீரில்லாக் கொடுமை அரசே!

நன்னன்

குடிப்பதற்கு நீரில்லா விட்டால் என்ன?
பழச்சாறு குடித்திடலாம் அன்றோ?

மலர்க்கண்ணி

ஐயோ!
பழச்சாறா? கஞ்சிக்கே வழியில் லாமல்
வறுமையெனும் படுகுழியில் வீழ்ந்தார். அவர்மேல்
வரியென்னும் ஓநாயை அவிழ்த்து விட்டோம்!
பஞ்சத்தால் ஒருகவளச் சோற்றிற் காகக்
கொஞ்சித்தான் வளர்த்திட்ட பிள்ளை விற்றார்!
நெஞ்சத்தால் நினைப்பதற்கும் எட்டாத் துன்பம்!
கெஞ்சித்தான் நிற்கின்றார்.

**முதல்குடிமகன்**

ஆமாம் மன்னா!
வைரமணி போலிருந்த என்றன் பிள்ளை
ஆறுவய துப்பிள்ளை பசியாற் செத்தான்.
குழியிலிட்டுப் புதைப்பதற்கோர் காசும் இல்லை.
வழியுரைப்பீர்! அவையோரே! காப்பீர் எம்மை!

**நன்னன்**

வறுமைகண் டஞ்சுவதா! வெட்க மில்லை?
நல்லோரின் தோழனன்றோ வறுமை? அதனை
எல்லாரும் ஏற்பதன்றோ பெருமை?

**அருள்மலையடிகள்**

அரசே!
குடிமக்கள் வறுமைஓர் சூறைக் காற்று!
அடித்தளத்தை, ஆட்சியினை அசைத்துப் போடும்!

**நன்னன்**

அடிகாள்! நீர் எல்லையற்ற நிலங்க ளோடு
படிப்படியாய்ப் பொற்காசு சேர்த்த ளந்து
மூட்டைகட்டி வைத்துவிட்டு, இறைவன் பேரால்
ஏட்டிலுள்ள மிகப்பலவளம் நீதி பேசி
வறுமையினைப் போக்கிடவே என்னைத் தூண்டிப்
பெருமையுடன் வாழ்கின்றீர். சரியா? சொல்லும்!

**மலர்க்கண்ணி**

கருணைமிகக் காட்டுங்கள் அரசே! ஓங்கும்
பெருமதில்சூழ் அரண்மனையில் நாமி ருக்க
எலிவளையின் இழிவுடைய இருண்ட வீட்டில்
நலிவுறுத்தும் பசிபிடுங்க நாயிற் கீழாய்
வாடிமிகச் சாகின்றார். நோய்கள் விஞ்ச
தேடிமிக வருகின்றார் காலத் தூதர்.
மலர்விரித்த பஞ்சணையில் நாமு றங்க
பலர்நடக்கும் தெருவோரம் சாய்ந்து, கொட்டும்
கடும்பனியில் கண்ணுறங்கப் பெரும்போ ராடி

'விடியாதோ' எனப்புலம்பி, விடிந்த பின்னே
'இன்றுமந்தக் கொடியபசி வருமோ? ஐயோ!
கொன்றுவிட்டுச் செல்லாதோ துன்பந் தீர?'
என்றேங்கிப் புலம்பிடுவார் கண்ணீர் சிந்தி.
இத்துயர்க்கோர் முடிவிலையா? 'மக்கள் கண்ணீர்
இத்தரையில் எரிமலையாம்' என்றா ரன்றோ?

நன்னன்

சாவதற்கு மிகவிரும்பிப் பசியை நோக்கி
ஆவலுடன் கேட்பதுமேன்? நாமே செய்வோம்!
மணிவர்மா!

[சுற்றிலும் பார்வையைச் செலுத்தி]

மணிவர்மன் எங்கே போனான்?
பட்டினியால் இறைவனடி சேரச் செய்யும்
திட்டமதில் உயர்வான திட்ட முண்டோ?
இப்பெரிய உதவிக்கே மக்க ளெல்லாம்
செப்பிடவே வேண்டுமன்றோ எமக்கு நன்றி?

[அடிகள் பக்கம் திரும்பி...]

வாழ்வினிலே வருகின்ற இன்பம் துன்பம்
தாழ்வோடு சாவுமுத லான வெல்லாம்
நமைப்படைத்தோன் விதித்தபடி நடக்கும் என்று
சுமைசுமையாய்ச் சாத்திரங்கள் சொல்லும் போது,
விதியாலே இவர்க்குவரும் தொல்லை தம்மை
மதியாலே போக்கிடுதல் தவறு தானே?
இறைவனது திட்டத்தைத் தடுத்து நீக்கச்
சிறிதேனும் நமக்குரிமை இல்லை சுவாமி!

முதல் குடிமகன்

[அருகிலிருப்பவனிடம் மெல்ல...]

கொற்றவனார் நெஞ்சமென்ன பாறாங் கல்லோ?

இரண்டாம் குடிமகன்

சற்றேநீ வாய்மூடு! அடிகள் கேட்பார்!

**அருள்மலையடிகள்**

ஊழ்வினையால் இன்பதுன்பம் வருதல் மெய்தான்.
வாழ்வினிலே, துன்பமெனும் தீயை மூட்டிப்
புடமிட்ட பொன்னாக்கி, இறைவன் நம்மைத்
திடமிக்க நல்லவராய்ச் செய்தல் கண்டோம்.
துன்பமெனும் மரத்தினது உச்சி மீதே
இன்பமெனும் அருட்கனியை வைத்தான் ஐயன்.
இருந்தாலும், தாழ்வுற்றோர் வறுமை கண்டு
வருந்திமிக நெஞ்சுருகி ஈதல் தானே
பெருந்தகைமைப் பண்பெனவே நூல்கள் கூறும்?
வருந்துகின்றார் வாழ்வினைச்சீர் திருத்தம் செய்க!

**முதல் குடிமகன்**

[அருகிலுள்ளவனிடம் மெல்ல...]

சீர்திருத்தம் என்று சொன்னால் என்ன ஐயா?

**இரண்டாம் குடிமகன்**

சீர்மிகுந்த வாழ்விருந்தால் அதனைத் 'தீர்த்தல்'!

**நன்னன்**

அறிவில்லா ஆட்டுமந்தைக் கூட்டம்.

**அருள்மலையடிகள்**

மன்னா!
அறிவில்லா ஆடுகளைக் காத்தல், மேய்ப்போன்
கடமையன்றோ? அம்மேய்ப்போன் மன்னன்.
அன்னோன்
உடமையன்றோ மக்களெலாம்? அதனால் காக்க!

**நன்னன்**

காத்திடுவேன் காத்திடுவேன், ஆட்டின் மேனி
போர்த்திருக்கும் மயிரையெலாம் எடுத்த பின்னே.

**முதல் குடிமகன்**

காப்பனெனச் சொல்கிறார். மன்னர் வாழ்க!

**இரண்டாம் குடிமகன்**

*[மெல்ல...]*

காப்பார்தம் சிறைச்சாலை தன்னில் பூட்டி!

*[வெளியிலிருந்து ஆரவாரம் கேட்கிறது...நன்னன் முகத்தில் சினம்]*

**நன்னன்**

வரிகொடுக்கும் கடமையினை மறந்தீர்! இங்குக்
குரைக்கின்றீர் பணிவின்றி! வாயை மூடும்!

**முதல் குடிமகன்**

கத்துகின்ற வாய்களுக்கோர் கவளமிட்டால்
மெத்தவுமே வாய்மூடிக் கொள்ளும் வேந்தே!

**நன்னன்**

பசியெனினும் வாயடங்கிப் பணிதல் வேண்டும்!
நசிகின்ற மக்களினைக் கட்டி யாள
இறையவனே அனுப்பியுள்ளான் எம்மை யிங்கே.
குறைகண்டால் சிறிதேனும் மனம் இரங்கோம்.
பாவத்தைத் தண்டிப்போம்!

**மலர்க்கண்ணி**

வேந்தே! இங்கே
பாவமொன்றும் செய்யாத மனிதர் இல்லை.

**நன்னன்**

பாவத்தை நேர்மைவந்து மோதும் போது
ஆவதொன்றும் இல்லையிந்த உலகில். ஆனால்
பாவமுடன் பாவமிக மோதும் போதே
ஆவலுடன் நோக்கிஇறை மகிழ்வார் இங்கே!

**மலர்க்கண்ணி**

அச்சமென்ப தணுவளவும் இலையோ அரசே!

**நன்னன்**

அச்சமொன்றே இவ்வுலகில் 'இன்பம் கொல்லி'!
குடிகளுக்கு நான்பகையாய் இருத்த லாலே
கடவுளுக்கு நண்பனென ஆகி விட்டேன்!

[மக்கள் பக்கம் திரும்பி...]

பொன்னாட்டுக் குடிமக்காள்! உங்கட் காக
என்னரசி பரிந்துரைத்த தெல்லாம் கேட்டேன்
குறைகளினை அறிந்து கொண்டேன்.

[கூட்டத்தினர் ஆவலுடன் முணுமுணுக்கின்றனர்...]

**முதல் குடிமகன்**

ஆ! ஆ! மன்னர்
குறைத்திடுவார் வரிகள்தமை!

**இரண்டாம் குடிமகன்**

உணவும் ஈவார்.

**நன்னன்**

ஆதலினால் நும்குறையை அகற்றல் வேண்டும்.
மேதகைய அருள்மலையீர்! 'பணிவு' என்னும்
ஒப்பரிய பொருள்பற்றி மக்கட் கெல்லாம்
செப்பிடுவீர் நாள்தோறும். குறைகள் நீங்கும்.

[மக்கள் வெறுப்புடன் முணுமுணுக்கின்றனர்]

**முதல் குடிமகன்**

பசிநீங்கிப் போய்விடுமோ அடிகள் பேச்சால்?

**மலர்க்கண்ணி**

பசியொன்றே பெருந்துணையாய்க் கொண்ட மக்காள்!
கண்டீரிப் பேரவையில் நடந்த வெல்லாம்.
கொண்டதுயர் போக்கிடவோர் வழியும் இல்லை.
என்செய்வேன்? என்னிடத்தே உள்ள பொன்னை
இந்நகரச் சத்திரத்திற் கீவேன். அங்கே
ஏதேனும் சிறிதுணவு பெற்றுக் கொள்வீர்!
வேதனையால் நைவதன்றி என்ன செய்வேன்!

[மக்கள் வெளியேறத் திரும்புகின்றனர்]

**முதல் குடிமகன்**

மலர்க்கண்ணி அருளரசி வாழ்க! வாழ்க!

[எல்லாரும் வெளியேற, இறுதியில் செல்லும் ஒரு குடிமகனை நன்னன் அழைக்கிறான்.]

**நன்னன்**

வாயிங்கே! மகனே! நின் பேரைச் சொல்லு!

**அமாவாசை**

மன்னவரே! என்றன்பெயர் அம்மா வாசை.

**நன்னன்**

நல்லபெயர்! ஏனிந்த பெயரைப் பெற்றாய்?

**அமாவாசை**

நல்லேன்அந் நாளினிலே பிறந்தேன் மன்னா!

**நன்னன்**

இந்தா!இப் பொற்காசைப் பெற்றுக் கொள்நீ!
வந்தனைசெய் தென்னைமிக வாழ்த்து வாயோ?

**அமாவாசை**

[மெல்லிய குரலில்...]

வாழியஎம் முடிவேந்தர்!

**நன்னன்**

உரக்கச் சொல்லு!

**அமாவாசை**

[முன்னைவிடச் சற்று உரக்க...]

வாழியஎம் பெருமன்னர்! வாழ்க! வாழ்க!

[நன்னன் பொற்காசுப் பை ஒன்றை வீசி எறிகிறான்]

**நன்னன்**

எடுத்துக்கொள்! குடிமகனே! உரக்க வாழ்த்து!

**அமாவாசை**

*[சட்டென்று காசுப்பையை எடுத்துக்-கொண்டு, மகிழ்ச்சியுடன்... மிக-உரக்க...]*

முடிமன்னன் அடிதொழுமெம் மன்னர் வாழ்க!

**நன்னன்**

*[ஏளனமாகச் சிரிக்கிறான்]*

அவையோரே! இவன்ஏழை பாவம்!

*[அவனை நோக்கி...]*

போ! போ!

*[அமாவாசை வெளியேறுகிறான்]*

அவையோரே! இந்நாளில் இவ்வா றேதான்
நலமிக்க பெரும்புகழை ஈட்ட வேண்டும்.

*[மலர்க்கண்ணியைப் பார்த்து...]*

மலர்க்கண்ணி! எனக்கெதிரே புரட்சி செய்ய
எல்லையற்ற துணிவுடனே இறங்கி விட்டாய்.

**மலர்க்கண்ணி**

இல்லைமன்னா! ஏழைகட்குப் பரிந்து சொன்ன
சொல்லையன்றி ஒருபாவம் அறியேன்.

**நன்னன்**

நன்று!

ஏழ்மைமிகக் கொண்டவர்க்குப் பரிந்து பேச
வாழ்ந்திடுமிவ் அவையிலுள்ளோர் ஒருவ ரேனும்
துணையாக வந்தாரோ உனக்கு? பெண்ணே,
அணைபோட்டுத் தடுத்துவிட்டேன் என்சினத்தை.

*[நெடுமாறன் ஏதோ சொல்லச் சிறிது நகர்ந்து கை நீட்டுகிறான். பின் பேசாமல் பழையபடி நின்று விடுகிறான்]*

தேனார்ந்த மலர்ச்சோலை சூழ்ந்த சாரல்
வானார்ந்த வளமலையை ஆண்ட சேரன்

பெற்றகுலக் கொழுந்தே! நான் பொறுத்தேன்!
கேள்நீ!
உற்றதொரு அரண்மனையை விட்டுச் செல்ல
இன்றுமுதல் தடையுனக்கு விதித்துள் ளேன்நான்!
என்றுமினி என்கருத்திற் கெதிராய்ச் சென்றால்
கதிரவனும் உள்நுழையாச் சிறையில் வைப்பேன்!
கதறிமிகப் புலம்பிடினும் இளகேன் உள்ளம்!

**மலர்க்கண்ணி**

[மெல்ல...]

மங்கலநாண் பூட்டவந்த கைகள் என்றன்
செங்கரத்தில் விலங்கிடவும் துணிந்த தின்று!

[உரக்க...]

மதியமைச்சர் சூழ்ந்திருக்கும் வேந்தர் வேந்தே!
இதுதானோ அவையெனக்கு வழங்கும் அன்பு!
இது என்ன...

**நன்னன்**

மதிமுகத்தாய்! உனக்கு முன்னே
விதிவசத்தால் மதிகெட்டு நாகா வாமல்
என்னுடைய இரண்டாவ தரசி ஓர்நாள்
இன்றுநீ கேட்பதுபோல் எதிர்த்துக் கேட்டாள்.
அவளுக்கு நேர்ந்தகதி அறியாய்! பாவம்!
அரண்மனையின் பின்னிருக்கும் சோலை தன்னில்
மரகதப்புல் போர்த்திருக்கும் வெளியில் நிற்கும்
சுரபுன்னை மரத்தடியில் பளிங்காற் செய்த
சிறப்புடைய சமாதிக்கல் பார்த்த தில்லை?
ஓய்விருக்கும் போதந்தச் சின்னந் தன்னைப்
போய்ப்பார்த்துச் சிந்தித்து நடந்து கொள்நீ!

[மேலே எழுந்து நின்று...]

அவைகலைக! நெடுமாறா! வா, வா! செல்வோம்!

—திரை

## காட்சி : 4

களம் : அரண்மனைச்சோலை

காலம் : பிற்பகல்

[மலர்க்கண்ணி சோகமே வடிவாகத் தனக்குத் தானே பேசிக் கொண்டிருக்கிறாள்]

**மலர்க்கண்ணி**

சேரத்து மன்னவரின் மகளாய்த் தோன்றி
வீரத்தாய் ஊட்டுவித்த வீரத் தாலே
ஆண்மகன்போல் வளர்ந்திட்ட நானோ, இன்று
வீண்மகளாய் உயிர்தாங்கி அடிமை போலே
வாழ்கின்றேன்! நைகின்றேன்! நாளும் நாளும்
தாழ்கின்றேன்; ஆழ்கின்றேன் துயரந் தன்னில்!
சீருடனே வஞ்சிநகர் வாழ்ந்த வாழ்வு
வேருடனே வீழ்ந்தமரம் போலே ஆக,
பூனைவாய்ச் சிக்கிவிட்ட கிளியே போல
ஏனிவரின் கைப்பிடியில் இடறி வீழ்ந்தேன்?
எல்லாமோர் பகற்கனவோ? உண்மை தானோ?
வல்லமைசேர் ஊழ்வலியோ? அன்றி வேறோ?
அந்தோ! இவ் வுலகத்தில் அழகைப் போலே
விந்தையுள்ள தீங்குசெயும் பொருளே இல்லை!
வஞ்சிநகர் வீழ்ந்ததுவும், வீரத் தந்தை

வெஞ்சமரில் மாய்ந்ததுவும் இவருக் கன்று
பெண்கொடுக்க மறுத்ததனால் அன்றோ? என்னை
பெண்கேட்டு வந்ததுவும் அழகால் அன்றோ?
இந்நகரில் அடிவைத்த அன்று தொட்டு
அன்பென்ப தறியாத பாவி யானேன்.
ஏனெடுத்தேன் பெண்பிறவி? கொடிய துன்பம்!
வகைவகையாய் அணிகள்பல குவிந்தி ருந்தும்
நகையறியா முகத்துடனே வாழ்கின் றேனே!
பெற்றோரின் உயிர்தின்று தாகங் கொண்டு
பெற்றியிலேன் எழில்குடிக்கச் சிறையெ டுத்துக்
கொண்டுவந்தே இங்கடைத்து வாட்டு கின்றார்.
வண்டுவரா மலர்போலப் பொலிவி ழந்தேன்.
'இனுமிரண்டு திங்களுக்குள் மணம்மு டிப்பேன்'
எனவுரைத்த சொற்களெனை நாளும் கொல்லும்!

[நெடுமாறன் மெல்ல வருகிறான்]

**நெடுமாறன்**

வருந்தாதீர்! வருந்துவதால் என்ன நன்மை?

**மலர்க்கண்ணி**

வருத்தமொன்றே என்தோழி. இங்கேன் வந்தீர்?

**நெடுமாறன்**

துன்பத்தைத் தனித்துவைத்தால் மலைபோல் நிற்கும்.
அன்புள்ளோர் பகிர்ந்துகொண்டால் கடுகாய்த் தேயும்.
தனித்திருந்து வருந்துவதேன் அரசி? இந்தப்
பனித்திரையை அகற்றுதற்கு வழியா இல்லை?

**மலர்க்கண்ணி**

[சோகத்துடன் சிரித்து]

வழியேது? வகையேது? துன்ப வெள்ளம்
இழுத்தென்னைத் துயர்க்கடலில் தள்ளிக் கொல்லும்.
அதைத்தடுக்க எவராலும் முடியா தையா!

வதைத்தென்னைக் கொன்றிடவே துணிந்த மன்னர்க்
கெதிராக வந்திடரில் சிக்க வேண்டாம்.
விதிவழியே நடக்கட்டும்! செல்வீர் ஐயா!

**நெடுமாறன்**

மன்னரிடம் எனக்குமிகச் செல்வாக் குண்டு.
என்சொல்லைத் தட்டாமற் கேட்பார். மெல்லக்
காவலனின் மனம்மாறச் செய்வேன். உம்மேல்
ஆவலுடன் அன்புகொளச் செய்வேன்.

**மலர்க்கண்ணி**

வேண்டாம்!
போதுமிந்தப் பெருவாழ்க்கை. போதும் போதும்.
ஏதுமினி என்வாழ்வில் நிகழ வேண்டாம்.
அன்புக்காய் எத்துணைநாள் ஏங்கி நின்றேன்!
வன்னெஞ்ச அரக்கர்கைச் சிக்கி நைந்தேன்!
என்வரையில் அன்புயரே தோன்றும் விண்மீன்.
என்கரத்திற் கெட்டாத கனியே அன்பு.

**நெடுமாறன்**

கைக்கெட்டாக் கனியதனைப் பறித்தே உண்ண
வைக்கத்தான் துடிக்கின்றேன் அரசி! உம்போல்
பெற்றோரை இழந்தவன்நான். வளர்த்த நல்ல
உற்றாரை விட்டுவிட்டு வந்தேன் இங்கே.
என்னைப்போல் தனித்திருந்து வாடும் உம்மைக்
கண்டுதுயர் கொண்டுமிக நெஞ்சம் நைந்தேன்.
விதிசெய்த பேரிடரை, இன்னல் தம்மை
மதிசெய்யும் திறனாலே வெட்டி வீழ்த்திப்
புதுவாழ்வு கண்டிடவே செய்வேன். வந்த
விதியென்ன செய்யும்நாம் இணைந்து நின்றால்?

**மலர்க்கண்ணி**

தாங்களென்ன சொல்கின்றீர்?

**நெடுமாறன்**

*[உணர்ச்சி பொங்க...]*

அன்புக் காக
ஏங்கிநின்ற என்னுளத்தில் ஆர்வ ஊற்றைப்
பொங்கியெழச் செய்திட்டீர்! ஆசை யென்னும்
வெங்கனலை மூட்டிவிட்டீர்! உள்ளப் பாலை
மலர்ச்சோலை போல்விளங்கச் செய்தீர்! என்றன்
கலங்காத மனக்குளத்தில் காதற் கல்லை
விட்டெறிந்தீர்! தூங்குகின்ற காதல் தன்னைக்
கட்டவிழ்த்து விட்டுவிட்டீர்! வீழ்ந்து விட்டேன்!

*[அரசி திகைத்து நிற்கிறாள்]*

செம்பவள வாயாலோர் ஆணை யிட்டால்
வெம்புலியின் பல்கொணர்வேன்! கானில் வாழும்
அரிமாவின் நகம்கொணர்ந்து முன்னர் வைப்பேன்!
பெருமலைவாழ் வேழத்தின் தந்தம் ஈவேன்!
வானகத்து மீனினத்தைப் பறித்துக் கோத்து
மானனைய உம்கழுத்தில் கட்டிப் பார்ப்பேன்!
கடிமலரே! நெடுமாறன் இதயக் கோயில்
குடியிருக்கும் பெண்ணெழிலே! காதல் வானம்
சிறகடித்து நாம்பறக்கக் காத்து நிற்கும்.
பெருந்தடைகள் வந்தாலும் எதிர்ப்போம்!

**மலர்க்கண்ணி**

ஐயோ!
காதலென்ப தறியாத என்னை இன்று
காதலிப்ப தாகமிகப் பேசு கின்றீர்
உள்ளமெலாம் குழம்பஅதிற் பாயும் அன்பு
வெள்ளத்தைத் தடுத்திடவோ ஆற்றல் இன்றி
விழிக்கின்றேன்; என்செய்வேன்! ஐயா, நீவிர்
சொன்னதெலாம் மெய்தானோ, சொல்வீர்!

**நெடுமாறன்**

ஆ! ஆ!
மலரின்மேல் ஆசைமிக உண்டா என்றே
உலவுகின்ற வண்டினத்தைக் கேட்டுப் பாரும்!
அமுதமதி மேற்காதல் உண்டா என்றே
குமுதமலர்க் கூட்டத்தைக் கேட்டுப் பாரும்!
வெங்கதிரோன் வரமலர்தல் உண்டா என்றே
செங்கமலப் பூக்களினைக் கேட்டுப் பாரும்!
பைங்கிளிகள் பேசாமல் இருக்கு மானால்
பூங்குயில்கள் பாடாமல் இருக்கு மானால்
கருமுகில்கள் பெய்யாமல் இருக்கு மானால்
என்காதல் பொய்யாகும். அன்பே, பேசு!
அன்பால்நாம் இணைந்துவிட்டோம் என்று சொல்லு!

**மலர்க்கண்ணி**

சொல்வதொன்று மறியாது திகைக்கின் றேனே!

**நெடுமாறன்**

சொல்லீரோ 'காதலித்தேன்' என்ற ஓர்சொல்?
ஐயத்தால் மனந்துடித்து நைவ தோநான்?
வையத்தில் காத்திருத்தல் துன்பம் அன்றோ?

**மலர்க்கண்ணி**

சிந்திக்க வாய்ப்பின்றி விரட்டு கின்றீர்.

**நெடுமாறன்**

எந்தவிதம் பொறுத்திடுவேன்? விரைவிற் சொல்வீர்!
இல்லையெனில் இங்கிருந்து போகச் சொல்வீர்!

**மலர்க்கண்ணி**

எல்லையிலாக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டீர்!
இங்கிருந்தால் என்னுளத்தைக் கொள்ளை கொள்வீர்
இங்கிருந்து உம்மைநான் போகச் சொன்னால்
என்னுளத்தை உம்முடனே எடுத்துச் செல்வீர்!

[சிறிது மௌனம்]

பொன்னார்ந்த மாளிகையாம் காதல் தன்னின்
எழிற்கதவம் இன்றேநான் திறக்கக் கண்டேன்.
ஒழித்திடுவேன் என்பழைய துன்ப வாழ்வை!
காதலித்தேன்! காதலித்தேன்! அன்பே!

**நெடுமாறன்**

ஆ! ஆ!
வேதனைசேர் என்னுளத்தில் பாலை வார்த்தீர்.

[ஆவலோடு மலர்க்கண்ணியின் கை
களைப் பற்றிக் கொள்கிறான்...]

எல்லையிலா மகிழ்வதனின் எல்லை கண்டேன்.
தொல்லையெலாம் ஒளிகண்ட இருள்போல் மாயச்
சொல்லவொணாப் பேரின்பக் கடலில் ஆழ்ந்தேன்.

**மலர்க்கண்ணி**

முதன்முதலாய் உமைக்கண்ட அன்றே என்றன்
இதயத்தை அறியாமற் கவர்ந்து கொண்டீர்.
மனத்திண்மை எனும்காவல் கடந்து சென்றே
கனத்திருந்த என்னிதயச் செல்வந் தன்னைக்
களவாடிப் பெருஞ்செல்வ ரானீர். நானோ
உளங்கொள்ளை கொடுத்ததனால் ஏழை
யானேன்.
ஏழைமையிற் சிக்கியவர் அழுவர். நானிவ்
வேழைமைக்கு மகிழ்கின்றேன்! என்ன விந்தை!

**நெடுமாறன்**

அன்புசெயும் விந்தையது கண்ணே! இந்த
இன்பமெலாம் இருவர்க்கும் பொதுவாய்ச்
செய்வோம்
என்றுமிதை அழியாமற் காப்போம். அன்றி
இன்னல்பல வந்தாலும் துணிவோ டேற்போம்.

மலர்க்கண்ணி

மகிழ்ந்திருக்கும் இவ்வேளை, துன்பம் பற்றிப்
புகலாதீர்! இனியமொழி சொல்வீர்! ஆகா
மின்னுகின்ற உம்மிரண்டு கண்கள் தம்மில்
என்னுருவம் காண்கின்றேன். உள்ளந் தன்னில்
அவ்வாறே என்னுருவை வைத்தீர் அன்றோ?

நெடுமாறன்

கொவ்வையிதழ்ப் புன்னகையாய்! உள்ளந் தன்னில்
கனியான நின்னுருவைக் காதல் என்னும்
நனிசிறந்த தூரிகையால் உயிரைத் தோய்த்துத்
தீட்டிவிட்டேன். இனியதனை அழித்தல் செய்ய
நாட்டிலுள்ளார் எவராலே முடியும்?

மலர்க்கண்ணி

அன்பே!
காதலினும் சிறந்ததொன்றும் உண்டோ இங்கு?

நெடுமாறன்

காதலுக்கோர் இணையுண்டோ! காதல் இல்லா
வாழ்வுவெறும் கல்லாகும். காதல் சேர்ந்தால்
வாழ்த்துகின்ற கலைச்சிற்பம் ஆகும். அன்புக்
காதலில்லா உள்ளமொரு பாலை. இன்ப
நாதமில்லா வீணை. நீர் இல்லா ஆறு!

மலர்க்கண்ணி

காவியங்கள் இல்லையிந்தக் காதல் இன்றேல்.
ஓவியர்கள் இல்லையின்பக் காதல் இன்றேல்.
கற்பனைசேர் கவிதையொடு ஆடல் பாடல்
சிற்பமுதற் கலைகளெல்லாம் காதல் இன்றேல்
வாழ்ந்திடுமோ? வளர்ந்திடுமோ?

நெடுமாறன்

ஆமாம் கண்ணே!
ஆழ்ந்திடுவோம் இன்பத்தில்...

*[நெடுமாறன் அவளை நெருங்க, அவள் திடுக்கிட்டுப் பின் வாங்கி...]*

**மலர்க்கண்ணி**

ஐயோ! யாரோ
மறைந்திருந்து பார்க்கின்றார்!

*[இதுவரை மறைந்து நின்று பார்த்துக்-கொண்டிருந்த கரிய உடையணிந்த உருவம் பாய்ந்து மறைகின்றது...]*

**நெடுமாறன்**

*[சட்டெனத் திரும்பிப் பார்த்து...]*

யாரும் இல்லை.
மறைந்திருந்து யாரேனுங் கண்டு விட்டால்
குத்தீட்டிக் கிரையாக்கித் தீர்ப்பேன்! சற்றும்
சித்தமது கலங்காதே, அன்பே! இங்கு
நித்தமும்நாம் சந்திப்போம். இந்த வேளை,
முத்தனையாய்! மன்னரெனை அழைப்பார். வாவா!

*[நெடுமாறன் மலர்க்கண்ணியை மார்போடு அணைத்துக் கொள்கிறான் அவன் பின்னாலிருந்த பூச்செடியொன்று அசைகிறது!]*

—திரை

## காட்சி : 5

**களம் : இருண்ட அரங்கம்**

காலம் : **இரவு**

*[அரங்கம் இருளில். ஒவ்வொரு பாத்திரமும் தனித்தனியே நின்று தனிமொழி பேசுகின்றனர். பேசுகையில் அவர்களின் மீது மட்டும் சிறிய ஒளிவீச்சு.]*

**முத்தரையர்**

புயலடிக்கும் புயலடிக்கும் வேளை வந்தது!
புயலுக்கு முன்னிந்த அமைதி சூழ்ந்தது!
புகழூரில் வீற்றிருந்தான் தலைவன் பொன்முடி
அகமகிழ ஆட்சிசெய்தான் மக்கள் மனப்படி
நஞ்சுமிழும் நாகமென நன்னன் வந்தபின்
வஞ்சனையும் சூதுகளும் கொலையும் மலிந்தன.
நாட்டரசு காட்டரசாய் மாறி விட்டது
மேட்டுநிலம் பள்ளத்தைத் தின்று தீர்த்தது
ஆதிக்க வெறியாட்டம் முடியும் நாளையே
சோதிமிக்க நல்லரசு நிலைக்கும் நாட்டிலே
சூழ்ச்சிகளைச் சூழ்ச்சிகளால் தீர்த்துக் கட்டுவேன்!
வீழ்ச்சியினி நன்னனுக்கு! செய்து காட்டுவேன்!
பொதிசுமக்கும் கழுதைகளோ இங்கு நாமெலாம்?
மதியிழந்த மந்திகளோ மக்கள் இவ்விடம்?
அடிமையிருள் அரைநொடியில் அழிந்து போய்விடும்.
விடியலிலே விடுதலையின் ஒளியும் பாய்ந்திடும்.
காத்திருந்த காலமெல்லாம் கரைந்து விட்டது.

பூத்திருந்த புரட்சியின்று கனிந்து விட்டது.
புலிவேடச் சாயமிங்கு கலைந்து விட்டது
நலிவடைந்த தமிழருக்கு நன்மை வந்தது
நெஞ்செரிந்த மக்களெலாம் பொங்கி யெழுந்தனர்
அஞ்சுதலை உதறிவிட்டு ஒன்று சேர்ந்தனர்
குப்பையிலே புதைந்திருந்த வைரம் போலவே
இப்புகழூர் அரியணைக்கு உரிமை யாகவே
நெடுமாறன் என்வசத்தில் இங்கு வாழ்கிறான்
முடிவுகட்டும் நேரமிது. முடியும் சூடுவான்.
புரட்சியிங்கு எரிமலையாய்க் குமுறு கின்றது
மரத்தலையன் அரியணையும் ஆடு கின்றது!
புயலடிக்கும் புயலடிக்கும் வேளை வந்தது!
புயலுக்கு முன்னிந்த அமைதி சூழ்ந்தது!

[ஒளிவட்டம் மறைய, முத்தரையர் உருவம் மறைகிறது. மறு பக்கம் ஒளி வீச்சுப் பாய, கையில் மதுக் கோப்பை யுடன் தள்ளாடும் நன்னன்...]

**நன்னன்**

மணிவர்மா, மணிவர்மா! மதுவை ஊற்று!
மணிவர்மன் மதுவர்மன் ஆய்விட் டானோ!
நெடுமாறன் குடிமாறன் ஆய்விட் டானோ!
அடியாட்கள் குடியாட்கள் ஆய்விட் டாரோ!
மதுதானே மானிடரின் மர்ம ஊற்று?
இதுதானே துயரழிக்கும் இன்பக் காற்று?
மலர்க்கண்ணி மதுக்கிண்ணி இரண்டும் ஒன்றே.
மலர்க்கண்ணி தரும்போதை அடுத்த வாரம்.
அதுவரைக்கும் மதுவுரைக்கும் கதையைக் கேட்போம்!
எது நடந்தால் எனக்கென்ன? ஊற்று, உள்ளே!
ஆடுகளை மேய்ப்பதென்ன இந்திர சாலம்?
கூடிடுமோ எனையெதிர்க்க? பேடிக் கூட்டம்!
ஓநாயின் குரல்வேண்டும் அவ்வப் போது.
தாமாக அடங்கிவிடும் அச்சம் கொண்டு.
ஆண்டவனின் அருளாலே கிடைந்த திந்த
மாண்புடைய அரியணையின் ஆட்சி. இங்கே
யாருமில்லை எனையெதிர்க்க! எதிர்க்க வந்தால்
வேருடனே அழித்திடுவேன்! தெரியும் யார்க்கும்!
புயலாவேன்! புலியாவேன்! பொசுக்கித் தீர்ப்பேன்!

[சற்றுத் தள்ளாடியபடி......]

மயல்தந்த மலர்க்கண்ணி எங்கே போனாள்?
உறங்கத்தான் போனாளோ? போகட்டும் போ!
கிறங்கத்தான் மதுவுண்டே! குளிக்க லாமே!

[ஒளிவீச்சு மறைய, நன்னன் உருவம் மறைகிறது. மற்றோர் பகுதியில் ஒளி வட்டம் பாய மலர்க்கண்ணியின் உருவம்......]

மலர்க்கண்ணி

புயல்நடுவே சிறுபடகு! சுழலின் ஈர்ப்பு!
துயரமெனும் காரிருளில் சூறைக் காற்று!
தவிக்கின்ற படகுக்குத் துடுப்பைத் தந்தார்.
குவிகின்ற இருட்டுக்கோர் ஒளியைத் தந்தார்.
எல்லாமே இழந்திருந்தேன். நன்னன் என்னைக்
கொல்லாமல் கொல்கின்ற துன்ப நாளில்
தொலைதூர விண்மீனாய், மின்னல் கீற்றாய்
அலைமோதும் துயர்க்கடலில் மாறன் வந்தார்.
கரையேறிப் போவேனோ? மூழ்கு வேனோ?
இறைவா!என் இறைவா!நீ கருணை காட்டு!

[இருள். அரங்கின் மறுகோடியில் ஒளி வட்டம் பாய, அதில் நெடுமாறன்]

நெடுமாறன்

வஞ்சத்தை வழித்துணையாய்ப் பற்றி வந்தேன்!
நெஞ்சத்தின் ஈரத்தைத் துடைத்து நின்றேன்!
வஞ்சிமகள் காதலிலே இடறி னேனோ?
விஞ்சிநின்ற குறிக்கோளை உதறி னேனோ?
ஏனிந்த இருதுருவ ஊச லாட்டம்?
என்கடமை என்காதல் இரண்டும் சேர்ந்து
ஒன்றாகச் செல்லாதோ?

[இருள். நெடுமாறன் உருவம் மறைகிறது. மறு ஒளிவீச்சில் ஓர் ஓரத்தில் அருள்மலையடிகள்]

அருள்மலையடிகள்

முருகா! முருகா!

—இருள்

—திரை

"Awake, Revenge, for thou art ill-advised to sleep;
Awake! what, thou art warn'd to watch!"

—Thomas Kyd's
THE SPANISH TRAGEDY.

இரண்டாம் அங்கம்

# இரவு

**முத்தரையர்**

உரையாடிக் கொண்டிருக்க நேர மில்லை.
விரைவாக அனைத்தையும்நாம் முடிக்க வேண்டும்!
எடுவாளை! திறகதவை! செல்க உள்ளே!
கொடுவாளின் நெடும்பசியைப் போக்கு!

**மலர்க்கண்ணி**

காதலினால் பெண்,தெய்வக் கன்னி யாவாள்
காதலினால் ஆண்,வீரச் சிங்க மாவான்.
இங்கேயோ எல்லாமே தலைகீழ் மாற்றம்
எங்கிருந்து இவ்வளவு இரக்கம் பெற்றீர்

காட்சி : 1

களம் : அரண்மனைச் சோலை

காலம் : மாலை

*[மலர்க்கண்ணி மலர்மாலை தொடுத்தவாறு தனியே, மெல்லப் பாடிக் கொண்டிருக்கிறாள்...]*

**மலர்க்கண்ணி**

இதய வாசலைத் திறந்து வைத்தேன்—அதில்
இருந்த துயர்களைத் துடைத்து வைத்தேன்.
உதய வேளையில் நீர்தெளித்தேன்—இந்த
உலகம் காணவும் கோலமிட்டேன்.
மாவிலைத் தோரணம் கட்டிவைத்தேன்—நல்ல
மலர்களைப் பாதையில் தூவிவைத்தேன்.
ஓவியம் போலவே நின்றிருந்தேன்—அவன்
ஒளிமுகம் காணவே காத்திருந்தேன்.
குத்துவிளக்குகள் ஏற்றி வைத்தேன்—எழில்
குங்குமத் திலகங்கள் இட்டுவைத்தேன்.
நித்தமும் அவன்புகழ் பாடிநின்றேன்—வரும்
நெடுவழி பார்த்துநான் வாடி நின்றேன்.
கற்பனைக் கனவுகள் கண்டுநின்றேன்—அவன்
காட்டிய இன்பங்கள் எண்ணிநின்றேன்.
சாற்றிய தோழிகள் தமைமறந்தேன்—அவன்
சுந்தர ஒளிமுகம் நினைத்திருந்தேன். 16

(இதய வாசலை...)

[பாடல் முடியும் போது நெடுமாறன் அரங்கின் ஒரு ஓரத்தில் நின்று கேட்கிறான்... பாடல் முடிந்ததும் அவள் அருகில் வந்து அமர்கிறான்... அவள் நிமிர்ந்து பார்த்துவிட்டு, மாலை தொடுப்பதில் தொடர்ந்து ஈடுபடுகிறாள்... சற்றுக் காத்திருந்துவிட்டு நெடுமாறன் பேசத் தொடங்குகிறான்...]

**நெடுமாறன்**

மலர்க்கண்ணி! ஏன்பேசா திருக்கின் றாய்நீ?
கலகலெனச் சிற்றோடை போல்நகைப்பாய்
இன்றென்ன இதழ்மூடி மௌனம் கொண்டாய்?
பொன்மலராம் இதழ்திறந்து பேசு கண்ணே!

**மலர்க்கண்ணி**

நிறைவேறாப் பெருங்கனவு நனவாய் வந்து
விரைந்தெனது மனக்கிண்ணம் நிறைந்து பொங்க
சொல்லமுடி யாஇன்பம் ஆழ்ந்த தாலே
சொல்லத்தான் நினைத்தாலும் இதழ்கள் மூடிப்
பூட்டிட்டுக் கொண்டனவே! என்ன செய்வேன்!

**நெடுமாறன்**

பூட்டிவிட்ட கதவினையென் இதழ்க ளாலே
திறந்திடுவேன் மலர்க்கண்ணி!

**மலர்க்கண்ணி**

என்ன விந்தை!
புறம்போகா திருந்திட்ட மனதை, என்றன்
பகைவனுக்கே பரிசாகத் தந்த அந்த
வகையினைத்தான் வியக்கின்றேன்!

**நெடுமாறன்**

[திகைப்புடன்] என்ன! என்ன!

**மலர்க்கண்ணி**

திகைக்கின்றீர். விளங்கவில்லை? அடடா! வாடித்
தனித்திருக்கும் என்னிதயக் கனிமேல் மாறன்
இனித்திருக்கும் கணைவாங்கி எய்த நீவிர்
என் பகைவன் அல்லீரோ?

**நெடுமாறன்**

[ஆறுதலடைந்து, பெருமூச்சுவிட்டு]

இல்லை யில்லை.
என்மனதைத் துளைத்ததுவுன் விழியாம் வேல்கள்.
இங்கவற்றால் நலிவுற்றுக் கிடக்கு மென்னைச்
செங்கரத்தால் மருந்திட்டுக் கட்ட லாமே!

**மலர்க்கண்ணி**

நோய்கிடப்போர் மற்றவர்க்கே உதவு வாரோ?
நோய்பட்டுக் கிடப்பதுதான் நீரோ? நானோ?

**நெடுமாறன்**

நோய்செய்து விட்டவளும் நீயே. அந்த
நோய்போக்கும் அருமருந்தும் நீயே.

**மலர்க்கண்ணி**

நன்று!

[அப்போது, அரண்மனைப் பணியாள் ஒருவன், பெட்டி ஒன்றைக் கையில் பிடித்தவாறு வருகிறான்...]

**பணியாள்**

அரசியார் திருவடிக்கு வணக்கம்!

[நெடுமாறன் பக்கம் திரும்பி...]

ஐயா!
வீரனொரு வன்வந்தே இதனைத் தந்து
தங்களிடம் சேர்ப்பிக்கச் சொல்லிச் சென்றான்.
இங்கிதனை ஏற்றிடுவீர்!

**நெடுமாறன்**

கொண்டா இங்கே!

[பணியாள் பெட்டியை நெடுமாறன் கையில் தந்துவிட்டு, இருவரையும் வணங்கி விட்டு வெளியேறுகிறான். மாறன் ஓர் இருக்கையில் அமர்ந்து அதனைத் திறக்க முயல்கையில், மலர்க்கண்ணி, அவன் பின்னால் வந்து, திடீரென அப்பெட்டியைப் பறித்துக் கொண்டு அப்பால் செல்கிறாள். மாறன் திடுக்கிட்டு...]

கொடுத்துவிடு மலர்க்கண்ணி!

**மலர்க்கண்ணி**

மாட்டேன், மாட்டேன்!

நடிப்பதிலே கைதேர்ந்த ஐயா இந்தப்
பேழையினை அனுப்பியவள் எந்தக் கன்னி?
ஏழைநான் அதையறிய லாமா?

**நெடுமாறன்**

அன்பே!

நினையன்றி வேறெவர்க்கும் நெஞ்சந் தன்னில்
தினையளவும் இடமில்லை. பேழை கொண்டா!

[மலர்க்கண்ணி மறுத்தவளாய் மேலும் எட்டச்சென்று பெட்டியைத் திறந்து பார்க்கிறாள். அவள் முகத்தில் வியப்பு.]

**மலர்க்கண்ணி**

நெடுமாறப் பெருந்தகையீர்! என்ன இஃது?
கொடுவாளும், அதன்பிடியில் வேங்கைச் சின்னம்!

[நெடுமாறன் அதிர்ச்சியுற்றுப் பாய்ந்து அந்த வாளைப் பறித்து அதன் கைப்பிடியைப் பார்க்கிறான்...]

**நெடுமாறன்**

அந்தோ! நான் எத்தகைய மூடன்! என்றன்
சிந்தைதனைப் பறிகொடுத்தேன்...

**மலர்க்கண்ணி**

யாருக் கையா?
யாரிதனைத் தந்துவிட்டுச் சென்றார் என்று
வீரரிடம் கேட்கின்றேன்...

[வெளியே செல்கின்றாள்]

**நெடுமாறன்**

(பின்குரல்)

அந்தோ! மாறா!
அதற்குள்ளே தந்தையினை மறந்தாய். பாவி!
எதுவரினும் கலங்காத நெஞ்சந் தன்னை
வஞ்சியிவள் கண்வலையில் சிக்க விட்டாய்.
நெஞ்செரிந்து சூளுரைத்த வெல்லாம் கொன்றாய்.
கொஞ்சிநின்றாய்! காதலிலே விஞ்சி நின்றாய்!
வஞ்சமதே இனியுன்றன் காதற் கன்னி!
விழுந்துவிட்ட மயக்கமெனும் திரையை நீக்கு!
பழுத்திருக்கும் வஞ்சமெனும் கனியை வெட்டு!
எழுந்துவிடு! தயங்காதே! ஏந்து வாளை!
காதலுக்கு விடைகொடுத்தே அனுப்பு! மாறா!
சாதலுக்கும் அஞ்சாதே!

[வெளியிலிருந்து மலர்க்கண்ணி விரைந்து வருகிறாள்.]

**மலர்க்கண்ணி**

அன்பே!

**நெடுமாறன்**

கண்ணே!
இனியென்னை மறந்துவிடு!

**மலர்க்கண்ணி**

[திடுக்கிட்டு] என்ன! என்ன?

**நெடுமாறன்**

கனிமொழியே! நம்மிருவர் காத லுக்கும்
இடையினிலே தடையொன்று பெரிதாய் உண்டு.

**மலர்க்கண்ணி**

தடையிருந்தால் தகர்ந்திடுவோம்!

**நெடுமாறன்**

இல்லை கண்ணே!
தகர்த்திடவே முடியாத எஃகுக் கோட்டை.
உகப்பென்ப தில்லையினி என்றன் வாழ்வில்.

**மலர்க்கண்ணி**

மெய்க்காதல் முன்னுள்ள தடைகள் எல்லாம்
பொய்த்தடையாம்! என்னதடை? சொல்வீர் அன்பே!

**நெடுமாறன்**

அருள்கூர்ந்தே அதனைமட்டும் கேட்க வேண்டாம்.
மருள்கொண்ட நம்காதல் மறப்பாய்! என்னைக்
காணவில்லை என்றேநீ எண்ணிக் கொண்டு
பேணிவிட்ட அன்புதனைப் புதைத்துப் போடு!

**மலர்க்கண்ணி**

[துடிதுடித்து...]
ஐயோ, நீர் கைதொட்டுச் சொன்ன சொற்கள்
பொய்யாமோ?

**நெடுமாறன்**

சொன்னவற்றைத் திரும்பப் பெற்றேன்.

**மலர்க்கண்ணி**

முடியாதே! காதலென்ன விருப்பம் போலே
கொடுப்பதற்கும் எடுப்பதற்கும் கடைச்சரக்கா?

**நெடுமாறன்**

நம்மிருவர்க் கிடையிருந்த தடையைக் காதல்
வெம்மையினால் நானன்று மறந்தேன்.

**மலர்க்கண்ணி**

அன்பே!
எத்தடையாய் இருந்தாலும் கவலை யில்லை.
எத்திசைக்கும் உம்பின்னே வருவேன். வாழ்வில்
மெத்தவுமே ஏழ்மையது வந்திட் டாலும்
சித்தமது கலங்காமல் வாழ்வேன். சின்னக்
குடிசையது வானாலும் இருப்பேன். கூழ்தான்
குடித்திடவே நேர்ந்தாலும் மகிழ்வோ டேற்பேன்.
ஒதுக்காதீர் இப்பேதைப் பெண்ணை, ஐயா!

**நெடுமாறன்**

விதிவந்து விளையாடும் வேளை. நானோ
மதுச்சேற்றில் காலிடறிக் காதல் மூழ்கி
எனைமறந்தேன். இன்றேநான் விழித்துக்
கொண்டேன்.
இனியென்னை மறந்துவிடு! போய்வா!

**மலர்க்கண்ணி**

[பொங்கும் துக்கத்தை அடக்கிக் கொண்டு]

ஐயா!
அடிமையெனக் கொடுநரகிற் கிடந்த என்னைப்
பிடித்தேன்நீர் காத்தின்பக் கனவு தந்தீர்?
காதலென்ப தறியாமல் இருந்த நெஞ்சில்
காதலெனும் நெருப்பினையேன் மூட்டி விட்டீர்?
மீட்டாது கிடந்திட்ட இதய யாழை
மீட்டிவிட்டேன் போகின்றீர் பாடும் முன்னே?
தீட்டிவந்த சித்திரத்தை முடிக்கும் முன்பே
தீட்டாமற் புழுதியிலேன் வீசுகின்றீர்?

கட்டவிட்ட புதுமனையில் வாழப் போங்கால்
தட்டிவிட்டேன் தரைமட்டம் ஆக்கு கின்றீர்?
பாடிவரும் காவியத்தை முடிக்கும் முன்னே
ஏடுகளைத் தீக்கிரையேன் ஆக்கு கின்றீர்?
கட்டவந்த மங்கலநாண் கயிற்றைக் கொண்டு
சட்டெனவே சுருக்கிட்டுக் கொல்கின் றீரே!
ஆசையினைத் தூண்டிவிட்டுத் துன்பக் காட்டில்
நாசமுற விட்டுவிட்டீர் ஐயா!

**நெடுமாறன்**

ஐயோ!
என்னுயிரே! என்நிலைமை அறியாய்! கண்ட
இன்பமெலாம் ஒருகனவாய் நினைப்ப தன்றி
வேறுவழி யில்லை. நான் என்ன செய்வேன்!
சீறிவரும் துயரமெனும் சூறைக் காற்றில்
நீமட்டும் சிக்கவில்லை. நானும் சிக்கித்
திகைக்கின்றேன். என்றாலும் பிரிதல் அன்றி
உகக்கின்ற வழியொன்றும் இல்லை. முன்போல்
இருந்திடுவோம்! நானுன்றன் பணியாள்!

**மலர்க்கண்ணி**

ஐயா!
பெண்ணழுதால் பேயிரங்கும் என்பார். இங்கென்
கண்ணீரைக் கண்டும்நீர் இரங்க வில்லை.
தடையென்ன என்றும்நீர் சொல்ல வில்லை.
உடைத்திட்டீர் என்னிதயந் தன்னைத் தூளாய்!

**நெடுமாறன்**

என்னளவில் இன்பமெலாம் மாய்ந்த தின்று!

[மெல்ல...]

சொன்னபழி தவறாது முடிப்பேன் இன்றே!

**மலர்க்கண்ணி**

[நொந்துபோய்...]

காதலுக்கு விடைகொடுக்க முயன்றிட் டாலும்
சாதலுக்குத் தலைகொடுத்தல் போல நாக்குத்
தடுமாறிப் பின்னடைந்து தயங்கு மிங்கே.
கொடுமையிலும் இதுபோன்ற கொடுமை யில்லை!

**நெடுமாறன்**

விடைகொடுநீ மலர்க்கண்ணி!

[அவளை நெருங்க, அவள்
சட்டெனப் பின்னடைகிறாள்.]

**மலர்க்கண்ணி**

வேண்டாம்! வேண்டாம்!
மீண்டுமென்றன் செத்துவிட்ட உள்ளந் தன்னைத்
தூண்டிவிட்டே உயிரூட்டிக் கொல்லா தீர்கள்!
சென்றிடுவீர்? இனியிங்கே பேச்செ தற்கு!

[நெடுமாறன் நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு, கையிலுள்ள வாளைப் பார்த்தவாறே தலை குனிந்து செல் கிறான். மலர்க்கண்ணி அவன் மறையு மட்டும் பார்த்துக் கொண்டு நிற்கிறாள். அவள் கண்களில் கண்ணீர்...]

சென்றாரோ? சென்றுவிட்டார்! கொன்றார்
அன்பை!
மணத்திற்கு வளர்த்திட்ட செந்தீ தன்னைப்
பிணத்திற்கு மூட்டிவிடும் தீயாய்ச் செய்தார்.
பெருநிலவைக் காட்டிடவே அழைத்து வந்து
காரிருளில் கைவிட்டுத் தனியே சென்றார்.
தடையென்றும் கடமையென்றும் கூறி, விருந்து
படைத்திடுமுன் எனைவிரட்டிச் சென்றார். அம்பு
பாய்ந்திட்டுக் குருதிமிகச் சிந்தி, மெல்ல
மாய்ந்திடுமோர் பறவைதனைப் போல ஆனேன்.
அடங்காத தாகத்தால் ஓடி யோடி
இடங்காட்டும் கானலைத்தான் கண்டேன் பேதை.

[சிறிது பொறுத்து...]
தடையுமக்கு வந்ததெனச் சொன்னீர். அந்தத்
தடையதுதான் என்னவெனக் கண்டே தீர்வேன்!

[அரங்கில் மெல்ல இருள் சூழ்கிறது. கரிய உடையணிந்த உருவம் நுழைகிறது.]

**உருவம்**

நெடுமாறா! நெடுமாறா!

**மலர்க்கண்ணி**

[திடுக்கிட்டு...]
ஆ! ஆ! ஐயோ!
[உற்றுப் பார்த்து]
மனங்கவர்ந்த காதலரைப் பிரித்த தெல்லாம்
இனம் விளங்கா உம்முடைய சூழ்ச்சி தாமோ?

**உருவம்**

[மகிழ்ச்சிக் குரலில்...]
உனையுதறிச் சென்றானோ மாறன்?

**மலர்க்கண்ணி**

இல்லை!
எனைமறக்க வியலாது தவித்தல் கண்டேன்.
எல்லாமே உம்முடைய சூழ்ச்சி! எம்மைக்
கொல்லாமற் கொல்கின்றீர்!
[சற்றுப் பொறுத்து] ஐயா, ஐயா!
கிட்டாத பொருள் பெற்றேன். அதனை நீவிர்
தட்டித்தான் பறிக்காதீர்! கருணை காட்டும்!

**உருவம்**

உன்னையவன் காதலிக்க வில்லை பெண்ணே!

**மலர்க்கண்ணி**

*[கொதிப்புடன்...]*

என்னசொன்னீர்? சொல்லாதீர்! நாக்கு வேகும்!

**உருவம்**

இன்றிரவு மட்டுமன்று பெண்ணே, மாறன்
என்றுமினி உன்கண்ணில் தோன்றான். போ! போ!

**மலர்க்கண்ணி**

சாவினது தூதனைப்போல் இங்கேன் வந்தீர்?
யாவர்நீர்?

**உருவம்**

என்பெயரா? 'வஞ்சம்'!

*[உருவம் இருளில் மறைகிறது.]*

**மலர்க்கண்ணி**

வஞ்சம்?
யாருக்கு நான்கொடுமை செய்தேன் இன்று
சீறியெனை வஞ்சமது சூழ்ந்து கொள்ள?
இனியெனக்குச் சிறந்ததுணை சாவு, ஒன்றே!
இனிமைமிகு சாவேநீ வா, வா! ஏற்பேன்!

—இருள்

காட்சி: 2

களம் : **அருள்மலையர் திருமடம்**

காலம் : **அந்தி**

*[அருள்மலையடிகள் திருமடத்தின் வழிபாட்டு மண்டபத்தில் அலங்கரிக்கப்பட்ட திருமுருகன் சிலைமுன் மலர்கள், கனிகள் முதலிய வழிபாட்டுப் பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அடிகளார் அமர்ந்து வழிபாடு செய்து கொண்டிருக்கிறார். அவர் எதிரே சற்றுத் தள்ளி, அவர் பார்வையில் படும்படி ஒரு சிறுவன் கைகூப்பி நிற்கிறான்...நெடுமாறன் அரங்கின் கோடியில் . ]*

**அருமலையடிகள்**

சேவலங் கொடியாய்! சேவடி போற்றி!
மூவாத் தமிழின் முதல்வா போற்றி!
குறமகள் உயிரே, முருகே போற்றி!
பொறிமயில் ஏறிடும் அறுமுக போற்றி!
சரவணப் பொய்கை அறுவர் கரத்தில்
பாலுண் டிருந்த வேலா போற்றி!
அறுபடை வீட்டில் சுரர்படை காத்துச்
சூரனை யழித்த தீரா போற்றி!
ஆவித் துணையே, அழகே போற்றி!

பாவப் பிணிக்கு மருத்துவ போற்றி!
போற்றி போற்றி! பூங்கழல் போற்றி!
அருள்க அருள்க! அனைவர்க் கருளுக!

[அடிகளார் கற்பூர தீபாராதனை
காட்டும் போது, சிறுவன் ஒரு ஓரத்தில்
நின்று மணியடிக்கிறான்... நெடுமாறன்
அடிகளார் எதிரே வந்து நிற்கிறான்.
அடிகளார் இருவர்க்கும் திருநீறு வழங்கு
கிறார். நெடுமாறனை அமரச் சொல்லிக்
கையசைக்கிறார்...அவன் எதிரில் அமர்
கிறான்...]

எதிர்பாரா வேளைதனில் வந்தாய் மாறா!
புதுச் செய்தி ஏதேனும் உண்டா? எங்கே
ஒருவாரம் இப்பக்கம் வரவே யில்லை?
அரசாங்க அலுவல்கள் மிகுதி போலும்!
மன்னவனும் நலந்தானே?

**நெடுமாறன்**

ஆமாம் சுவாமி.

**அடிகளார்**

என்னஇன்றுன் குரலினிலே சலிப்பின் சாயல்?

**நெடுமாறன்**

உள்ளத்தில் உருவமிலாக் குழப்பம் சுவாமி.

**அடிகளார்**

புள்ளிமயில் வாகனனை எண்ணு! நெஞ்சைக்
கலக்குகின்ற குழப்பங்கள் ஓயும்; மாயும்.
கலங்காத நெஞ்சுறுதி கொள்க! வீரா!
உடல்தேரில் வீற்றிருக்கும் தலைவன் ஆன்மா.
அடங்காதே பாய்கின்ற புலன்கள் என்னும்
குதிரைகளை மனக்கயிற்றால் இறுகப் பற்றி
மதியென்னும் தேரோட்டி, செலுத்த வேண்டும்.

தேரோட்டி குழம்பிவிட்டால் தேரும் சாயும்.
தேரமர்ந்த தலைவனுக்கும் துன்பம் நேரும்.
காரியத்தின் காரணத்தை ஆய்தல் வேண்டும்.
சீறிவரும் சினமின்றி ஆய்தல் வேண்டும்.
சினத்தாலே மனக்குழப்பம் நேரும். இந்த
மனக்குழப்பம் பகுத்தறிவை நாசம் செய்யும்.
அறிவழிந்தால் மனிதனுமே அழிந்தே போவான்.
வெறுப்பில்லா இதயத்தில் வெகுளி யில்லை.
உறுதியிலா உள்ளத்தில் அமைதி யில்லை.
அறிவுதனை நிலைப்படுத்து!

**நெடுமாறன்**

சுவாமி! ஆடிக்
காற்றிலையாம் இவ்வுலகில் அமைதிக் குன்றாய்
வீற்றிருக்கும் உமைக்கண்டு வியக்கின் றேன்நான்.
தங்களது திருமுன்னர் அமரும் போது
பொங்கியெழும் குழப்பங்கள் இல்லை. ஆனால்
இங்கிருந்து வெளியேறிச் சென்று விட்டால்
எங்கிருந்தோ கவலைப்பேய் பாய்ந்து பற்றும்.

**அடிகளார்**

நினைத்தேன்நான். சிலநாளாய்க் கவலைச் சாயல்
பனித்திரைபோல் நின்முகத்தில் கண்டேன். என்ன
காதல்தான் காரணமோ மாறா?

**நெடுமாறன்**

[திகைத்து...] சுவாமி!
காதலொரு பாவமென்று...

**அடிகளார்**

பழித்துப் பேசேன்!
இல்லறமாம் மாளிகையின் அடிக்கல் காதல்.
நல்லறமாம் வானத்தின் கதிரே காதல்.
கறைபடிந்த பாழ்மனத்தின் நோயைப் போக்கி
நிறையறமாம் நலம்விளைக்கும் மருந்தே காதல்.

களைமண்டிக் கிடக்கின்ற உள்ளக் காட்டில்
களைநீக்கி வளம்பெருக்கும் மழையே காதல்.
இதயமணி போர்த்திருக்கும் பதரைத் தூற்ற
மிதமாக வீசுகின்ற காற்றே காதல்.
பாலைமனம் சோலைவனம் ஆக்கும். அந்தச்
சோலைமனத் தில்குயில்கள் பாடச் செய்யும்.
மொழிகடந்தும் இனம்கடந்தும் என்றும் எங்கும்
அழியாதே நிலைநிற்கும் புனிதம் காதல்.
கவலையெனும் நோயாலே நாளும் சாகும்
அவரையெலாம் வாழ்விக்கும் அமுதம் காதல்.
மெய்க்காதல் மருமத்தை அறிந்தோர் எல்லாம்
தெய்வத்தின் மருமத்தை அறிந்தோ ராவர்.
கூழ்குடித்துக் குடிசைதனில் வாழ்ந்திட் டாலும்
வாழ்விக்கும் காதலங்கு நிலவு மாயின்
அம்மனையே திருக்கோயில் என்பேன். அந்தச்
செம்மையின்றேல் மாளிகையும் சுடுகா டாகும்.

நெடுமாறன்

இத்தகைய விளக்கத்தைக் கவிஞர் கூட
சித்திரிக்கக் கேட்டதில்லை. விந்தை!

அடிகளார்

மாறா!
கவலையதன் காரணத்தைக் கேட்டேன் சொல்சொல்!

நெடுமாறன்

தவறாது பின்னொருநாள் சொல்வேன். சுவாமி!

[சற்றுத் தயங்கி...]

வஞ்சமொரு பெருந்தீங்கே என்பார். ஆனால்
வஞ்சகத்தை வீழ்த்துகின்ற வஞ்சம் தீதோ?

அடிகளார்

நீசமனம் பெற்றெடுத்த அரக்கி, வஞ்சம்.
ஆசையுடன் குருதிகரம் பூசிக் கொள்வாள்!

திடுமெனவே இவ்வையம் தோன்று வானேன்!
நெடுமாறா! வஞ்சகர்கள் வாழ்வ தில்லை.
தீயவர்க்குத் தீர்ப்பளிக்க நீயார், நான் யார்?
தீயவரைத் தண்டிக்க மனித ரெல்லாம்
தனித்தனியே கொலைவாளை ஏந்தி விட்டால்
இனித்திடுமோர் நாட்டமைதி என்ன வாகும்?
நீதிதர அவையுண்டு. அரச னுண்டு.

**நெடுமாறன்**

நீதிபதி யேகொடுமைக் கார னானால்?

**அடிகளார்**

தெய்வத்தின் திருச்சபையில் சொல்ல லாமே!
மெய்ப்பொருளின் நீதியதைக் கேட்க லாமே!
எல்லார்க்கும் நலம்விளைக்கும் செயலென் றாலும்
நல்வழியில் தானதனைச் செய்தல் வேண்டும்.
வள்ளுவனார் வினைத்தூய்மை பற்றிச் சொன்ன
தெள்ளுதமிழ்க் கருத்துக்கள் அறிவா யன்றோ?
வழித்தூய்மை, செயல்தூய்மை கொண்டு, சற்றும்
குழப்பமிலா மனத்தெளிவு பெற்று, நாளும்
பற்றற்றுச் செயல்புரிவோன் யாரோ, அவனே
குற்றமிலாப் பெருந்துறவி, யோகி யாவான்.
பகைவர்க்கே அருள்வோனும் யோகி யாவான்.
சமத்துவமே யோகமெனக் கீதை பேசும்.

**நெடுமாறன்**

வாழ்க்கையொரு விடுகதையோ? அன்றி வேறோ?
வாழ்வதனின் மர்மங்கள் அறிந்தோர் யாரே?

**அடிகளார்**

ஆண்டவனின் அருட்கரத்தால் எழுதப் பட்ட
மாண்புடைய காவியமே வாழ்வு. ஆனால்
முற்பகுதி, பிற்பகுதி இழந்து போன
கற்பனைகள் மிக்கதொரு கதையே அஃது.
தொடக்கநிலை தெரிகிறது. ஆனால் அந்தத்

தொடக்கத்தின் காரணந்தான் தெரிய வில்லை.
முடிவுநிலை சாவென்போம். ஆனால் அந்தக்
கொடுஞ்சாவின் காரணந்தான் விளங்க வில்லை.
நெடுங்காலப் பெருவெளியில் மனித வாழ்வு
சுடர்தெறிக்கும் ஒருகணந்தான். ஆனால் அந்த
ஒருகணத்தை ஒருயுகமாய் எண்ணி, அந்த
ஒருயுகமும் போதாமல் ஏங்கு கின்றோம்!
சென்றுவிட்ட நாளையெண்ணி வாடு கின்றோம்.
நாளைவரும் நாளையெண்ணி அஞ்சு கின்றோம்.
இன்றிருக்கும் நாளையெண்ணிப் பார்ப்ப தில்லை.
இந்நாளைப் பயனுறவே கழிப்ப தில்லை.
நற்செயலால், நல்லுணர்வால் வாழ்தல் வேண்டும்.
நாட்களினால், ஆண்டுகளால் அல்ல. இங்கே
நூறாண்டு வாழ்ந்ததனால் வாழ்ந்தோர் ஆகார்.
சீரோடு வாழ்ந்தவரே வாழ்ந்தோர் ஆவர்.
வாழ்வதனைக் கடல்நீருக் கொப்பாய்ச் சொல்வேன்.
தாழ்வகல வானத்தை நோக்கிச் செல்லும்
போழ்தேஅக் கடல்நீரும் நன்னீர் ஆகும்.
வாழ்வினிலும் மனமுயர்ந்தால் நல்லோர் ஆவர்.

**நெடுமாறன்**

வாழ்க்கையொரு சுமையென்றார்...

**அடிகளார்**

ஆமாம்! ஆனால்
தாழ்த்தாத வருத்தாத புனித மான
சுமையாகும். அச்சுமையைத் தாங்கிக் கொண்டே
அமைதியுடன் மேலேநாம் செல்ல வேண்டும்.
செல்லுகையில் துன்பங்கள் குறுக்கே பாயும்.
மெல்லமெல்லப் பாவங்கள் தலையைத் தூக்கும்.
அத்தனைக்கும் கலங்காத நெஞ்சம் கொண்டு
மெத்தவுமே குறிநோக்கிச் செல்ல வேண்டும்.
அன்பென்னும் நெடுஞ்சாலை செல்கின் றோர்க்குத்
துன்பமிலை. தடையில்லை. பகையும் இல்லை.

முடிவற்ற பெருவாழ்வை அடைதல் ஒன்றே
முடிவுள்ள இவ்வாழ்வின் முடிந்த நோக்கம்.

**நெடுமாறன்**

வஞ்சகரும், வறியோரைக் கண்டு சற்றும்
நெஞ்சிரக்கம் கொள்ளாத கொடியர் தாமும்
நல்லவர்போல் வல்லவராய் வாழுகின்றார்.
தொல்லையிலாச் சுகவாழ்வில் திளைக்கின்றார்கள்.
நல்லவரோ நலிகின்றார். கயவராலே
எல்லையிலாத் துயருக்கே ஆளாகின்றார்.

**அடிகளார்**

நல்லவர்கள் கோழைகளாய் மாறிவிட்டார்.
வல்லவரை எதிர்ப்பதற்கே அஞ்சுகின்றார்.
அஞ்சாது மலைபோல நிற்க வேண்டும்
வஞ்சகர்முன் அன்பேந்தி!

**நெடுமாறன்**

[திகைத்து...] சுவாமி?

**அடிகளார்**

ஆமாம்!
அன்பேந்திப் போர்க்களத்தில் குதிக்க வேண்டும்.
அன்பைவிடக் கூரியதோர் வாளொன்றில்லை.
அன்பாலே கயவர்களை வெல்ல வேண்டும்.
அன்பவரைக் கொல்லாது. ஆனால் அந்த
வஞ்சகத்தை, கயமையினைக் கொல்லும். பின்னர்
நெஞ்சகத்தில் தான்புகுந்து நிறைந்து கொள்ளும்.
அன்பின்முன் தீமைகளோ நாணிச் சாகும்!

**நெடுமாறன்**

அன்புதனை வஞ்சகர்கள் மதிப்பதில்லை!

**அடிகளார்**

அவசரத்தால் செய்துவிட்ட முடிவு அஃது.
தவறாமல், தளராமல் மேலும் மேலும்

அன்பென்னும் சுடரேந்தி நிற்போ மாயின்
வன்புடையோர் கல்மனமும் உருகும் பாகாய்...
அன்பதனால் விலைமதியா மன்னிப் பென்னும்
மின்னுகின்ற வைரமணி பிறக்கும். நல்ல
இனிமை கொஞ்சும் நெஞ்சகத்தைச் சாம்ப லாக்கும்
சினத்தீயை அணைக்கும்நீர் மன்னிப் பாகும்.
மன்னிப்பே இதயமலைச் சிகர மாகும்!
மன்னிக்க மாட்டார்க்கு மன்னிப் பில்லை!

**நெடுமாறன்**

*[பெருமூச்சு விட்டு, எழுந்து...]*

நெடுநேரம் ஆயிற்று சுவாமி! என்றன்
தடுமாறும் உள்ளத்தில் அமைதி கண்டேன்.
மற்றோர்நாள் ஓய்வாக வந்து காண்பேன்.

**அடிகளார்**

சற்றேனும் கலங்காதே! போய்வா மாறா!

*[நெடுமாறன் வெளியேறுகிறான்]*

—மேடை மெல்ல இருள்கிறது...

## காட்சி : 3

களம் : **அரண்மனைப் பகுதி**

காலம் : **நள்ளிரவு**

*[நெடுமாறன் அரங்கின் நடுவில் நிற்பது நிழலுருவ மாகத் தெரிகிறது. இருள். வெளியே இடி மின்னல், மழை—சாளரத்தின் வழியே தெரியும் மின்னல் வீச்சின் ஒளி மட்டும் அவ்வப்போது அரங்கில் விழுகிறது...]*

**நெடுமாறன்**

அறுவடைக்கு வாள்வந்த காலம். வஞ்சம்
இரு சிறகைத் தலைமீதில் விரிக்கும் கோலம்.
நெஞ்சுநிறை இருளெல்லாம் ஒன்றாய்க் கூடும்.
வஞ்சனையைச் செய்வதற்காய்த் திரையைப்
போடும்
வானகத்தின் விண்மீன்கள் போன தெங்கே?
மோனநிலா முகம்மூடிப் போன தெங்கே?
அரண்மனையின் விளக்குகளுக் கென்ன அச்சம்?
திரிகளெல்லாம் கருகியதேன்? இருளே மிச்சம்.
ஒளியெங்கே ஒளியெங்கே ஓடிப் போச்சு?
வழியிங்கே வழியிங்கே மூடிப் போச்சு! 10
விண்ணின்மேல் ஏனிந்த மாற்றம்? இந்த

மண்ணின்மேல் ஏனிந்தச் சீற்றம்? ஓகோ!
அண்டத்தைப் பிளக்கின்ற மின்னல் கீற்று?
எண்டிசையும் கலக்குகின்ற சூறைக் காற்று!
கொட்டியழும் பேய்மழையால் வெள்ளக் காடு!
கொலையிருளும் இடிமுரசும் ஊழிக் கூத்து!
இவ்விரவைப் போன்றதைநான் கண்ட தில்லை.
இவ்விதமே என்மனதில்...

[சாளரத்தின் வழியாகக் கரிய உடையணிந்த உருவம் உள்ளே குதிக்கிறது. நெடுமாறன் திடுக்கிட்டு முன்னால் பாய்கிறான்.]

நில்நில்! யார்நீ?

[அந்த மாயாவி அசையாமல் நிற்கிறது. பளீரென்ற மின்னல் ஒளி...]

எடுதிரையை! தாமதித்தால் குத்திக் கொல்வேன்.

### உருவம்

உடனேசெய்! உடனேசெய்! வல்ல வீரம்!
கொடியவனின் உயிர்குடிக்க நல்ல நேரம்!
நெடுமாறா! இவ்விரவே உன்றன் வாழ்வின்
பொன்னிரவு! எடுவாளை வஞ்சந் தீர்க்க!

[உருவம் முகமூடியைக் கழற்ற, பளீரென்று வெட்டிய மின்னல் வீச்சில் முகம் தெரிகிறது. நெடுமாறன் திகைப்படைகிறான்...]

### நெடுமாறன்

என்ன! ஆ! ஆ! முத்தரையர்! விந்தை! இந்தக்
கரியாடை பூண்டென்னைத் தொடர்ந்த தெல்லாம்
பெரியவரே நீர்தாமா? இங்கேன் வந்தீர்?

**முத்தரையர்**

*வேண்டுமடா! எனக்கின்னும் வேண்டும்! வேண்டும்!*
*ஆண்டவனே! எத்தனைநாள் காத்திருந்தேன்!*
*இந்நாளே பொருத்தமெனத் தேர்ந்தெடுத்து*
*முன்னாளின் பழிதீர்க்க, உன்றன் தந்தை*
*ஆன்மாவைக் குளிர்விக்க வந்தேன். நீயோ*
*'ஏன்வந்தாய்' எனக்கேட்டாய்! கேள்கேள்!*

**நெடுமாறன்**

*ஐயா!*
*வஞ்சமதைத் தீர்த்திடநான் தயங்க வில்லை.*
*நெஞ்சத்தில் உருவமிலாக் குழப்பம்.*

**முத்தரையர்**

*தம்பீ!*
*உரையாடிக் கொண்டிருக்க நேர மில்லை.*
*விரைவாக அனைத்தையும்நாம் முடிக்க வேண்டும்.*
*எடுவாளை! திறகதவை! செல்க உள்ளே!*
*கொடுவாளின் நெடும்பசியைப் போக்கு! அந்த*
*மலர்க்கண்ணி உனைத்தடுக்க மாட்டாள். ஆனால்*
*காத்திருக்கும் விழிவலையில் சிக்கா வண்ணம்*
*ஆத்திரத்தால் குழப்பமெதும் நேரா வாறு*
*அன்றுரைத்த முறைப்படியே நன்னப் பேயைக்*
*கொன்றுவிட்டு கண்ணிக்கோர் பொய்யைச் சொல்லி*
*அரண்மனையின் கீழ்வாயில் விரைந்து செல்க!*
*பறந்திடுக காத்திருக்கும் தேரில் ஏறி!*
*மதுரையினை நீயடையும் வேளை, காலை*
*சதிகாரன் கொலையுண்ட செய்தி கேட்டு*
*உன்நாட்டுக் குழப்பமொன்று வெடிக்கும். மக்கள்*
*வெள்ளம்போல் பொங்கிவந்து சூழ்வர். பின்னர்*
*பலசெயல்கள் மடமடென நிகழும். எல்லாம்*
*பலநாளாய்த் திட்டமிட்டுச் செய்துள் ளேன்நான்.*
*சரிசரி!நீ உள்ளேசெல்! எனக்குச் செய்யும்*

பெரும்பணிகள் மிகவுண்டு...

[நெடுமாறன் உடன்பாடு தெரிவிக்காமல், அசையாமல் நின்று கொண்டிருப்பது கண்ட முத்தரையர் திகைத்த குரலில்...]

மாறா! என்ன?
சிந்திக்க இதுவன்று நேரம். போபோ!

[சாளரத்தை நோக்கி விரைந்து செல்கிறார். சாரளத்தருகில் சென்றதும் திரும்பிப் பார்க்கிறார். மாறன் அப்படியே நிற்பது கண்டு, விரைந்து திரும்பி வந்து...]

அந்தோ! ஆ! என்ன இது! தயக்க மென்ன?
கொந்தளிக்கும் மனத்துடனே துடிக்கின் றேன்நான்
சிந்தனையில் சிலைபோல நிற்கின் றாயே!

**நெடுமாறன்**

[தயங்கிய குரலில்...]

பெருந்தகையீர்! இதைத்தவிர வழியொன்
றிலையோ?

**முத்தரையர்**

[திடுக்கிட்டவராய் மாறனின் கையைப் பிடித்து இழுத்து...]

பேசுவதார்? நெடுமாறன் தானா? எங்கே
வீசுகின்ற மின்னொளியில் முகத்தைப்
பார்ப்போம்!
சீச்சீ!நீ கோழைமகன்! அஞ்சி விட்டாய்!
நாற்சந்தி யில்தந்தை தலையை வெட்டி
வைத்தமகன் உன்மனையில் உறங்கு கின்றான்
வாய்த்திருக்கும் வாய்ப்பினைநீ விட்டு விட்டுத்
தயங்குகிறாய் மயங்குகிறாய்......

[வருத்தம்மிக எங்கோ பார்த்தபடி]

ஐயோ, இந்தப்
பயங்கொள்ளிச் சிறுவனைநான் நம்பி னேனே!
பொன்முடியே! உன்பழியை முடிக்க வல்ல
நன்மகனை நீயெங்கே பெற்றாய் ஐயா.

[சினத்துடன் மாறன் பக்கம் திரும்பி...]

பழிமுடிப்பேன் என்றாயே சற்று முன்பு?

**நெடுமாறன்**

பழிமுடிக்கும் முறையில்தான் கருத்து வேறு!
நன்னனைநான் கொலைசெய்தால் கொலைஞன்
ஆவேன்.
என்னவிதம் அப்பழியைச் சுமந்து வாழ்வேன்?
மன்னிப்பே தண்டனையிற் சிறந்த தாகும்!
நன்னன்தன் வாழ்வெல்லாம் உள்ளம் நோக...

**முத்தரையர்**

மன்னிக்க முடிவெடுத்தாய் அன்றோ மாறா?
அந்தோநான் என்னுயிரைப் பணயம் வைத்துன்
தந்தைக்கு வாக்களித்த வாய்மை காக்கத்
திட்டங்கள் பலதீட்டிக் காத்தி ருந்தேன்.
எட்டநின்று நீவளரப் பார்த்தி ருந்தேன்.
அத்தனையும் துகளாக்கி விட்டாய்! இன்று
சித்தமிகத் தடுமாறிப் பேசு கின்றாய்.
அருள்மலையர் உபதேச வலிமை போலும்!
பெருமகனே! பொன்முடியின் வீரச் செல்வா!
இதுவாநீ தந்தைக்குச் செய்யும் நன்றி?
இதற்காநான் இத்தனைநாள் காத்தி ருந்தேன்!

**நெடுமாறன்**

அச்சத்தால் இம்முடிவை எடுக்க வில்லை.
நிச்சயம்நான் வீழ்த்திடுவேன் போர்க்கு வந்தால்.

நள்ளிரவில் அறைநுழைந்து குத்திக் கொல்லும்
குள்ளநரித் தந்திரமா வீரம்? ஐயா!
இதுவன்றோ கோழைசெயல்? என்றன் தந்தை
இதுபோன்று பழிமுடிக்க விரும்பார்!

**முத்தரையர்**

தம்பீ!
மனமாற்றக் காரணத்தை அறிந்தேன். அந்தக்
கனிமொழியாள் விழிச்சுழலில் வீழ்ந்தே விட்டாய்!
கவலைவிடு! நன்னனைநீ தீர்த்துக் காட்டு!
அவளைநான் உனக்குமணம் முடிப்பேன். போ, போ!
வஞ்சித்துக் கொன்றவனை வஞ்சத் தாலே
கிஞ்சிற்றும் இரங்காது கொல்ல வேண்டும்.
சிந்திக்க இதுவன்று நேரம். என்னைச்
சந்திக்கக் காத்திருப்பர். செல்ல வேண்டும்.
தயங்காதே!

[நெடுமாறனின் இடையிலுள்ள வாளை உருவி அவன் கையில் கொடுத்து...]

தந்தையின்வாள் தாகம் போக்கு!
மயங்காதே! 'தந்தைபழி'—மறந்தி டாதே!

[விரைந்து சாளரத்தின் மீது ஏறி வெளியில் குதித்து மறைகிறார். பளீ ரென வானில் மின்வெட்டு. சில கணங் களில் பேரிடி முழக்கம். மாறன் சிலை போல நிற்கிறான்...]

**மாறனின் பின்குரல்**

நெடுமாறா!

**நெடுமாறன்**

(திடுக்கிட்டு) யாரங்கே!

**பின்குரல்**

யாரும் இல்லை!

படுபாவி! ஏனிந்தக் குழப்ப மெல்லாம்?
ஏற்றிருந்த சூளுரையைக் காற்றில் விட்டாய்.
தந்தைபழி, அன்னைதுயர் மறந்தாய். உன்றன்
சிந்தைநிறை அன்பரசு நட்பைக் கொன்றாய்.
காதலிளங் கன்னியவள் காதல் தன்னைக்
காதகன்போல் குழியிலிட்டுப் புதைத்து விட்டாய்.
இத்தனைநாள் காத்திருந்து திட்ட மிட்ட
முத்தரையர் எண்ணமெலாம் சிதைக்க நின்றாய்.
மறவழியோ அறவழியோ, முடிவு கட்டு!
திறல்வீர மகனாகத் தெளிந்து நில்நீ!
நெஞ்சுறுதி தளராதே! உறுதி கொள்க!
எஞ்சிநிற்கும் பெரும்பழியைத் தீர்ப்பாய், போ போ!

[மின்வெட்டு. இடிமுழக்கம்...]

—இருள்

காட்சி : 4

களம்: அரண்மனை மண்டபம்

காலம்: நள்ளிரவு

[நெடுமாறன் அரங்கின் இடப்பக்கத்திலிருந்து மெல்ல நடந்து வருகிறான். மண்டபத்தின் வலக் கோடியில் பெரிய அகல்விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருக்கிறது. மாறன் அரங்கின் மையத்தை அடையும்போது வலப்பக்கத்திலிருந்து நன்னனின் முனகல் ஒலி, ஒரு பொருள் கீழே விழும் ஓசை கேட்கிறது...மாறன் சட்டெனநின்று...]

**நெடுமாறன்**

மன்னவனின் குரலன்றோ? விழித்தார் போலும்!
இன்னுமொரு நாழிகைநான் பொறுத்தல் வேண்டும்
அயர்ந்துறங்கும் வேளைதனில் 'முடித்து' விட்டு
மயிலனையாள் மலர்க்கண்ணி யிடத்தே எல்லாம்
விரித்துரைத்து, அவளுடனே மறைதல் வேண்டும்.
சரியென்பாள்...

[அப்பொழுது வலக்கோடி நன்னனின் படுக்கையறைக் கதவு திடீரெனத் திறக்கிறது. அறை வெளிச்சம் அரங்கில் பாய்கிறது. மலர்க்கண்ணி வாயிற்படியில் நிழலுருவமாக நிற்கிறாள்...]

**மலர்க்கண்ணி**

யாரங்கே?

**நெடுமாறன்**

நான்தான் மாறன்!
இராக்காவல் காக்கின்றேன். மன்னர்...

**மலர்க்கண்ணி**

ஆழ்ந்த
உறக்கத்தில் இருக்கின்றார். விழிக்க மாட்டார்.

[கலகலென உரக்கச் சிரிக்கிறாள். மாறன் திடுக்கிட்டுச் சினத்துடன்...]

**நெடுமாறன்**

அவருறக்கம் கலைத்திடவோ சிரித்தீர்? செல்லும்!
அவரறையில் பணியெனக்கொன் றுண்டு!

**மலர்க்கண்ணி**

[விலகாமல் வழிமறித்து நின்றபடி உரக்க...]

இல்லை!

**நெடுமாறன்**

உண்டென்றேன்! இல்லையென்றால்? விலகி நில்லும்!
கண்டுசில சொல்லிடவே வந்தேன்

**மலர்க்கண்ணி**

இல்லை!

**நெடுமாறன்**

இல்லையென்றால் என்னபொருள்? விலகும்! பேச்சுத்
தொல்லையினால் கண்விழித்தால் ஏச்சுக் கிட்டும்.

**மலர்க்கண்ணி**

இனியில்லை அத்தொல்லை இவருக் கென்றும்!

**நெடுமாறன்**

[நெடுமாறன் திடுக்கிட்டு நடுங்கிய குரலில் மெல்ல...]

கனிமொழியே! என்னஅது? விளங்கச் சொல்லு!

**மலர்க்கண்ணி**

மாமன்னர் நன்னனினிப் பேச மாட்டார்!
நாமிருவர் இணைவதற்குத் தடையும் சொல்லார்!

**நெடுமாறன்**

[திகைத்துப் பதற்றத்துடன்]

மலர்க்கண்ணி! என்செய்தாய்?

**மலர்க்கண்ணி**

[நிதானமாக, ஆனால் அழுத்தமான குரலில்...]

குத்திக் கொன்றேன்!

[நெடுமாறன் திடுக்கிட்டு நாவெழாமல் நிற்கிறான்...]

மலர்க்கண்ணி உமக்காக இதனைச் செய்தாள்.
மாயாவி யுடன்நீங்கள் பேசக் கண்டேன்.
ஓயாத உம்கவலை உணர்ந்து கொண்டேன்.
தடையாக நிற்கின்ற கடமை தன்னை
உடைவாளால் முடித்திட்டேன்! இனிநீர் எங்கே
அழைத்தாலும் நிழலாகத் தொடர்வேன்! அன்பு
தழைத்திடவே வாழ்ந்திடுவோம்!

**நெடுமாறன்**

ஐயோ! பாவி!

அன்பென்றுன் நாவாலே சொல்ல வேண்டாம்!
அன்பதனை இரக்கமின்றி வெட்டிச் சாய்த்து
நிற்கின்றாய்! அன்புபற்றிப் பேசு கின்றாய்!
சற்றுமுன்னே என்னவெலாம் எண்ணி வந்தேன்!
அரைக்கணத்தில் அத்தனையும் பொசுக்கி விட்டாய்.

நிறைந்திருந்த இதயத்தை உடைத்துப் போட்டாய்!
உன்றனுக்கே அன்புதனை ஏந்தி வந்தேன்.
நன்னனுக்கு மன்னிப்பைக் கொண்டு வந்தேன்!
விலைமதியா இரண்டினையும் தட்டி விட்டாய்!
கொலையாலே கறைபட்டாய்! அன்பைக்
கொன்றாய்!
'நெடுநாளின் பழிமுடிக்க வந்த மாறன்
கொடியவழி பழிதீர்த்தல் என்று கண்டு
அன்புவழி மேற்கொண்டு வஞ்சம் நீக்கி
மன்னித்து, மலர்க்கண்ணிப் பெண்ணைக் காக்கக்
கொண்டுசென்றான்' எனும்சிறிய குறிப்பைத் தீட்டிக்
கொண்டுவந்தேன் நன்னனுக்கு! கொன்று விட்டாய்!

**மலர்க்கண்ணி**

கணந்தோறும் பச்சோந்தி மாறல் போலக்
குணம்மாறி மனம்மாறிப் பேசும் ஐயா!
யார்க்காக இக்கொலையைச் செய்தேன்? எண்ணிப்
பார்க்காமல் சொற்கணைகள் தொடுக்க வேண்டாம்!
இருள்புலரா இதயத்தில் ஒளியைப் பாய்ச்சி
அருள்காட்டிக் காதலெனும் சிலையை வைத்தீர்.
பின்னொருநாள் அதையுடைத்தீர்! அன்பைக்
கொன்றீர்!
இன்றுவந்தேன் அன்புபற்றிப் பேசு கின்றீர்?
நானிழந்த காதலன்பைப் பெறுதற் கன்றோ
ஈனமிகும் இக்கொலையைச் செய்தேன்! நீரோ
கொலைகாரி எனப்பழித்து ஏசு கின்றீர்!
நிலையில்லா மனமுடையோர் பெண்கள் என்று
ஆணுலகம் சொல்லிவந்த தெல்லாம், தங்கள்
நாணமற்ற குணக்குறையை மறைக்கத் தானோ?
காதலினால் பெண், தெய்வக் கன்னி யாவாள்.
காதலினால் ஆண், வீரச் சிங்க மாவான்.
இங்கேயோ எல்லாமே தலைகீழ் மாற்றம்!
எங்கிருந்தே இவ்வளவு இரக்கம் பெற்றீர்?

**நெடுமாறன்**

ஏதேதோ சொல்லியெனை மாற்ற வேண்டாம்!
சூதுடைய கொடுமனத்தால் இரக்க மின்றிச்
செந்நீரால் காதலினைக் குளிக்க வைத்தாய்.
மென்கரத்தால் எப்படிநீ இதனைச் செய்தாய்?
நன்னனையா உயிர்குடித்தாய்? இல்லை இல்லை!
அன்பையன்றோ தூக்கிலிட்டாய்!

**மலர்க்கண்ணி**

(கசப்புடன்) சொல்லும்! சொல்லும்!

கேட்கின்றேன் சொல்வதெல்லாம்! என்ன செய்ய!
வேட்கைமிகக் கொண்டதனால் அறிவி ழந்தேன்.
காதலிலே சிக்குண்ட பெண்கள், தங்கள்
காதலினைக் காப்பதற்கே என்ன வெல்லாம்.
செய்வரென ஆண்களுக்குத் தெரியா தையா!
கைநடுங்க மனம்நடுங்கக் கொலையும் செய்தேன்.
கைக்கறையை நீரதனால் கழுவிக் கொள்வேன்.
மனக்கறையை எங்கேபோய்க் கழுவ வல்லேன்!

[ஓரடி முன் சென்று...]

இனிக்கின்ற காதலினை மறந்தீர். நானோ
பனிக்கின்ற விழிகளுடன் புலம்பு கின்றேன்.
வீணாகப் பழிசுமத்திப் பயன்தான் என்ன?
காணாது நாமுடனே மறைவோம்! எல்லாம்
தீயதொரு கனவைப்போல் மறப்போம்! காதற்
கோயிலிலே புதுவாழ்வைத் தொடங்கி வாழ்வோம்!

**நெடுமாறன்**

வஞ்சகத்தை விதைத்தவரின் நெஞ்சப் பாத்தி
கிஞ்சிற்றும் காதற்பயிர் வளர்வ தில்லை.
தீயவர்க்குத் தெய்வமிட்ட சாபம் இதுதான்:
'தீயவரால் காதலிக்க முடிந்தி டாது!'
குற்றமுள்ள நெஞ்சத்தில் காதல் ஏது?

**மலர்க்கண்ணி**

[சீற்றத்துடன்...]

குற்றமுள்ள நெஞ்சுடையோர் நீரா? நானா?
பழிதீர்க்கும் நெஞ்சமுடன் அன்றோ வந்தீர்?
வழிமறித்து நீரன்றோ காதல் தந்தீர்?
உலகறியாப் பெண்ணாக வாழ்ந்தேன். அன்று
கலக்கிவிட்டீர் என்மனதைக் காதல் பேசி.
விலக்கிவிட்டீர் இன்றென்னை நொடியில். ஐயோ!
காதலன்தன் காதலிக்குத் தருதல் கொஞ்சம்.
காதலிதன் காதலற்கோ அனைத்தும் ஈவாள்.
யார்க்காக இதனைநான் செய்தேன்? ஐயா!
உமக்காக! உமக்காக!

**நெடுமாறன்**

இல்லை! இல்லை!
நன்னனைநான் கொலைசெய்யச் சொல்ல வில்லை!
உன்பெற்றோர் தமைக்கொன்ற கார ணத்தால்
முன்பழியை நின்கரத்தால் முடித்துக் கொண்டாய்!
விழிக்காதே என்முகத்தில்! போ!போ!

**மலர்க்கண்ணி**

(வருந்திய குரலில்) ஆகா!
எத்தகைய காதலரைப் பெற்றேன்! நல்ல
புத்தமுதம் என்றுரைத்து நஞ்சை நல்க
வந்தவரே! உமக்கிந்த பேதை வாழ்வா
சொந்தமுடன் விளையாடக் கிடைத்த தின்று?
சற்றேனும் மனமிளகி எண்ணிப் பாரும்!

**நெடுமாறன்**

வெற்றுரையால் என்னபயன்? போ!போ!

**மலர்க்கண்ணி**

(எங்கோ பார்த்தவாறு...) ஐயோ!
நடந்ததெலாம் நடவாத தாகி டாதோ?
கடமையென நீருரைத்த மொழியை எண்ணி

அல்லிமலர்க் கரம்குருதி பூசிக் கொண்டேன்.
இல்லையென்றால் நானெதற்குச் செய்வேன் பாவம்?

[திடீரென மாறன் கால்களில் மண்டி யிட்டு அழுதபடி...]

ஆருயிரே! நீர்வெறுத்தால் எங்கே
எங்கே செல்வேன்?
நீருமது பேரன்பால் என்றன் பாவக்
கறையதனைக் கழுவிடுவீர்! இன்றே சற்றும்
குறையில்லா இதயமுடன் வருவேன் உம்பின்.
செய்தவெலாம் மன்னிப்பீர்! நன்னன் அன்று
செய்தவெலாம் மன்னிக்கத் துணிந்தீர் அன்றோ?
தீயவரைச் சாய்த்தவரைப் போற்று வார்கள்.
தூயவள்நான் செய்தசெயல் மன்னித் திடுவீர்!

[நெடுமாறன் அசையாமல் நிற்பது கண்டு திகைத்து...]

உருகவிலை உம்நெஞ்சம் அன்றோ?

[சட்டென அவனது உடைவாளைப் பறித்தபடி எழுந்து, அதை நீட்டி...]

ஐயா!
அருள்கூர்ந்திப் பெண்ணுயிரை எடுத்துக் கொள்ளும்!
உம்மால்தான் உயிர்தாங்கி நின்றேன். இன்றே
உம்கரத்தால் சாகின்றேன்! பாய்ச்சும் வாளை!

[நெடுமாறன் திடுக்கிட்டுப் பாய்ந்து அவள் கையிலிருக்கும் வாளைப் பறிக்கிறான்... வானில் மின்வெட்டு. பின் இடி முழக்கம்... தொடர்ந்து மின் வெட்டு... மீண்டும் இடிமுழக்கம்... சூறைக் காற்றின் ஓசை...]

**நெடுமாறன்**

[வாளேந்திய தன் கையை உற்றுப் பார்த்துவிட்டு, மெல்ல...]

குருதிதனில் நீராடி வந்தாய்! என்றன்
கரங்களையும் கறைப்படுத்தி விட்டாய்! பாவி!

கொலைகாரி!

### மலர்க்கண்ணி

(துயரச் சிரிப்புடன்) கொலைகாரி! நல்ல பட்டம்!
கொலைச்சாவு தனியாக வாரா தென்றும்
துணையுடனே வருமென்றும் சொல்வர். இன்று
துணையொன்று முன்கொலைக்குத் தரப்போ
கின்றேன்!

[பைத்தியம்போல உரக்கச் சிரிக்கிறாள்]

துணையொன்று முன்கொலைக்கு நடக்கும் இன்று!
கன்னியர்கள் ஏமாற்றப் பட்டு விட்டால்
என்செய்வர் என்பதைநீர் அறிய மாட்டீர்!

[என்று கூறி விரைந்து வெளியேறு
கிறாள். அரங்கின் நடுவே நெடுமாறன்...
மின்னல் ... இடி ... மழை ... பேரொலி
முழங்கிப் பின் மெல்லக்குறைந்து அமைதி
சூழ்கிறது...]

### நெடுமாறன்

வீழ்ந்ததுவென் வாழ்வெல்லாம்! இனியொன் றில்லை!
தாழ்ந்ததுவென் பெருமையெலாம்! நன்னன்
போனான்!
ஒழியட்டும்! அப்பாவி தன்னால் அன்றோ
பழியேற்றாள் மலர்க்கண்ணி! இல்லை இல்லை!
என்காதல் பரிசேற்கச் செய்தாள். பாவம்!
என்மீதில் எவ்வளவு அன்பு! நானோ
தாவுகின்ற மனக்குரங்கின் சேட்டை யாலே
ஈவிரக்கம் சிறிதின்றி சின்னக் குயிலின்

இதயத்தில் எரிவேலைப் பாய்ச்சி விட்டேன்!
விரைந்தாளே மலர்க்கண்ணி! எங்கே சென்றாள்?
ஒருவேளை தற்கொலைக்கு...முயற்சிப் பாளோ?
ஐயையோ! அதனைத்தான் குறிப்பாய்ச் சொன்னாள்.
செய்திடுமுன் தடுத்திடுவேன்! அவளைக் காப்பேன்!

*[விரைந்து ஓரடி எடுத்து வைக்கிறான். ஆனால், அதே வேளையில் 'தடதட' வெனப் பலர் ஓடி வரும் ஓசை கேட்டுத் திடுக்கிட்டு நிற்கிறான்...]*

**மலர்க்கண்ணியின் குரல்**

அவனேதான்! பிடியுங்கள்! அவன்தான் கொன்றான்!

*[வீரர் பாய்ந்து வந்து மாறனைச் சூழ்ந்து கொள்கிறார்கள். ஒருவன் அவன் வாளைப் பறிக்கிறான்...மின்னல் வீச்சு... இடியோசை...]*

— இருள்.

" Justice and punishment. Sentence him to death! Death to the murderer! We have borne too much!"

— Ivan Kocherha's
YOROSLAV THE WISE
(Act : 11 Se. IV)

மூன்றாம் அங்கம்

# விடியல்

**அருள்மலையடிகள்**

முத்தரையா! உபதேசம் மாசு போக்கும்!
சித்தத்தை ஒருநிலையில் நிறுத்தும்! பாரில்
நல்லதையும் தீயதையும் பகுத்துப் பார்க்கும்!
எல்லார்க்கும் நன்மைசெயச் செய்யும்!

**அறவாழி**

உண்மைதனை நாமறிவோம்! எனினும் அந்த
உண்மைதனை நாடறிய வேண்டும். மேலும்
கொடுஞ்செயலின் காரணமும் விளங்க வேண்டும்.
திடுமெனவே தீர்ப்புரைத்தல் முறைமை யன்று!

காட்சி : 1

களம் : நீதி மன்ற வாயி

காலம் : முற்பகல்

[அரங்கின் வலக்கோடியில் வேலேந்திய காவல நிற்கிறான். நடுவில் வேலன் நிற்க, முத் வருகிறான்...]

முத்து

வணக்கம் வேலா!

வேலன்

வணக்கம்! வாய்யா!
அத்திபூத் ததுபோ! ஆமாம் முத்து!
இத்தனை நாளாய் எங்கே தொலைந்தாய்?
நெடுநா ளாகக் காணோம். கண்ணிற்
படவே இல்லை?

முத்து

போனேன் ஐயா!

வேலன்

பெருமூச் செதற்கு? எங்கே சென்றாய்?

முத்து

கருமம் தொலைக்கக் காசிக்குச் சென்றேன்.

வேலன்

தொலைத்தா யிற்றா? பாக்கி உண்டா?

முத்து

தொலைத்தேன்! தொலைத்தேன்! கருமமும் காசும்!

வேலன்

இப்படித் தொலைப்பதில் சிலர்க்கு நிம்மதி!
எப்பொழு திங்கே வந்தாய்?

முத்து

நேற்று
மாலை வந்தேன். வந்ததும் இன்று
காலை இந்தத் திடுக்கிடும் செய்தி!
மிகப்பல நாளாய்த் துயரில் வாடும்
புகழூர்க் கின்று பொன்னாள் இலையா?

வேலன்

மெல்லப் பேசு பக்கம் பார்த்து!
தொல்லை விளையும் காவலர் கேட்டால்

முத்து

இல்லை இனியத் தொல்லை என்றும்
எல்லை இல்லாக் கொடுங்கோ லாட்சியின்
எல்லை கண்டோம். இனியேன் அச்சம்?

வேலன்

உண்மை! எனினும் நமக்கேன் வம்பு?

முத்து

உண்மை என்றால் உரைப்பது தானே
திண்மை கொண்ட தீரர்க் கழகு?
உண்மைக் கொடியை உயர்த்திப் பிடிப்போம்!
அச்சமோர் பாவம். அடிமை எண்ணம்
நிச்சயம் நம்மை நீளிருள் தள்ளும்.
நெடுநாள் இந்த நன்னப் பாவியின்

கொடுங்கோ லாட்சியில் குறைகள் கூற
வாய்ப்பூட் டிட்டமை காரண மாக
நாய்க்கடை வாழ்வில் நெஞ்சம் நலிந்தோம்.
ஏழைக ளானோம். இதனினும் கொடுமை
கோழைக ளானோம். கொன்றோம் துணிவை!
இந்தப் பாவி சந்ததி யின்றி
எந்தக் கடவுள் அருளி னாலோ
செத்துத் தொலைந்தான்! செங்கோ லாட்சி
இத்திரு நாட்டில் இனிமேல் நிலைக்கும்.
தாழ்வும் ஒழியும். தரித்திரம் அழியும்.
வாழ்வும் உயரும். வளர்கலை ஓங்கும்.

**வேலன்**

எல்லாம் எழிலுற நிகழும். ஆனால்
பொல்லா நன்னற் கடுத்துச் செங்கோல்
ஏற்க யாருளர்? இனியார் மன்னர்?

**முத்து**

வேற்றுநாட் டரசர் வளைத்திட முயல்வர்
நேற்றொரு சேதி நண்பர் உரைத்தார்.
பொன்னா டதனை முன்னர் ஆண்ட
பொன்முடி மன்னர். நன்னன் கையில்
சிக்கிப் புகழூர்ச் சிறையிற் கிடந்து
மிக்க துயரில் மூழ்கிய வேளை,
அரசிக் கொருமகன் அயலூர் தன்னில்
பிறந்த சேதி மறைமுக மாக
வந்தது கேட்டு மகிழ்ந்திருந் தாராம்.
அந்தப் பிள்ளை இப்போ தெங்கோ
வளர்கின் றானாம். வாய்ப்புக் கிடைத்தால்
வளநா டாள வந்திடு வானாம்.

**வேலன்**

ஓகோ! சரிசரி! ஒருநாள், நல்லூர்
நாக ராயர் நன்மனை தன்னில்

சிலபேர் கூடி இரகசிய மாகக்
கலகம் விளைக்கப் பேசின ரென்று
தன்னன் ஆட்கள் நாக ராயரை
வன்சிறை யிட்டனர். இன்னும் சிலரைத்
தேடுகின் றனராம் காடுகள் தன்னில்.
அரண்மனை தன்னில் ஆட்சிப் பொறுப்பில்
இருக்கும் சிலரும் புறத்தே நன்னனை
வாழ்த்தி யிருந்து வாய்ப்புக் கிடைத்தால்
வீழ்த்தி நல்ல வளமிகு ஆட்சி
ஏற்படுத் திடவே எண்ணியுள் ளனராம்.
காற்று வாக்கில் காதில் விழுந்தது.
எனினும் அரசி மிகமிக நல்லவள்.
இனிதாய் நாட்டை ஆள வல்லவள்.

முத்து

இன்று நடந்த இந்தக் கொலையை
நின்று முடித்த நல்லவன் யாரோ?
அந்தக் காளை வீரக் கைக்கே
ஆயிரம் முத்தம் அளித்திட வேண்டும்!

வேலன்

கொடுங்கோ லதனைக் குழியிற் புதைத்தோன்
நெடுமா றன்எனும் நெஞ்சுரம் மிக்க
வீரன் என்றார். வேற்றூர்க் காரன்.
காரணம் ஒன்றும் கூறிட விலையாம்.

முத்து

எவ்வா றவனிவ் வரண்மனை நுழைந்தான்?
எவ்வா றரசனைக் கொன்றிட் டானாம்?

வேலன்

மன்னற் கவனே மெய்காப் பாளன்!

**முத்து**

என்ன! என்ன! மெய்காப் பாளன்!
நன்னனைக் கொன்றான்! நல்ல விந்தை!
வேலியே பயிரை மேய்ந்த கதைதான்!

**வேலன்**

[தொலைவில் பார்த்து......]

காலையில் நம்மூர் மக்கள் அனைவரும்
வேலை தம்மை மறந்தார் போலும்!
பார்!பார்! அங்கே! மக்கள் கூட்டம்
ஆர்வத் துடனே அலையலை யாகத்
திரளவும், காவலர் தடுக்கின் றார்கள்.
திருநாள் எனவே நினைத்தார் போலும்!

**முத்து**

ஐயம் என்ன? மெய்யாய் இன்று
புகழூர் தனக்குப் புதுநாள்! திருநாள்!

[முத்தரையர் அங்கே விரைந்து வருகிறார். வேலனும், முத்துவும் ஒதுங்கி நிற்கின்றனர்...]

**முத்தரையர்**

என்ன ஆனார் மன்னர் நன்னர்?

**முத்து**

என்ன ஆவார்? இச்சக வாழ்வைத்
துச்சம் எனவே தூக்கி எறிந்து
பரலோ கம்செலப் பயணச் சீட்டு
இரவோ டிரவாய் வாங்கிச் சென்றார்!
உயரப் பறந்ததே உயிரெனும் பறவை!

**முத்தரையர்**

கொன்ற மனிதன் யாரவன்?

**வேலன்**

*அவனா?*

*சற்றே பொறுங்கள் சடுதியில் இங்கே*
*குற்ற வாளியைக் கொண்டு வருவர்.*

**முத்தரையர்**

*கொலைகா ரன்பெயர்?*

**முத்து**

*நெடுமா றன்எனச்*
*சொல்லிக் கொண்டனர்.*

**முத்தரையர்**

*[எங்கோ பார்த்து, மெல்லத் தனக்குள்...]*

*நினைத்தேன்! நினைத்தேன்!*

*ஆனால் நேற்றவன் அஞ்சி யவனாய்க்*
*காணப் பட்டான். கலங்கி யிருந்தான்!*
*எப்படித் துணிந்தான் இப்படிச் செய்ய!*

*[வேலனை நோக்கி உரக்க...]*

*ஐயா! கொலைஞன் அரசனை எதனாற்*
*கொன்றான் என்பதைக் கொஞ்சம் கூறும்!*

**வேலன்**

*நன்றாய்க் கேட்டீர்! ஒன்றா இரண்டா?*
*கொலையில் ஆயிரம் விதங்கள் உண்டு!*
*வில்லாற் கொல்வர்! வாளாற் கொல்வர்!*
*சொல்லாற் கொல்வர்! சிலரோ தங்கள்*
*பார்வையி னாலே பதைக்கக் கொல்வர்!*

**முத்தரையர்**

*ஆரதைக் கேட்டார்? கொலைஞன் கொன்ற*
*கருவியைக் கேட்டேன்.*

**வேலன்**

ஒகோ! முத்து!

**முத்து**

பொறுபொறு! காவலர் ஏதோ சொல்வார்.

**காவலன் குரல்**

போங்கள்! போங்கள்! ஈங்கேன் கூட்டம்?
போதும் கூச்சல் ஏதும் அறியீர்!

**வேலன்**

சரிசரி முத்து! விரைவோம் இவ்வழி!

[வேலனும், முத்துவும் சென்றபின் ஒரு காவலன் நுழைகிறான். முத்தரையரைக் கண்டதும் பணிந்து வணங்குகிறான்...]

**காவலன்**

வழக்கினைக் காண வந்தீர் போலும்!

**முத்தரையர்**

வழக்கே குழப்பம்! விளங்கச் சொல்லேன்!

**காவலன்**

குழப்பம் ஒன்றும் இல்லை ஐயா!
மன்னவர் தம்மை மாறன் கொன்றார்.
மின்னலைப் போல மறைந்திடு முன்னர்
அரண்மனைக் காவலர் அவரைப் பிடித்தனர்.
சிறையில் அடைத்தனர்.

**முத்தரையர்**

சரிதான். ஆனால்
காவலர் அந்தக் கடுமழை இரவில்
காவலன் கொலையைக் கண்டதெவ் வாறு?

**காவலன்**

அரண்மனைச் சேவகர் அறியார் அதனை.
அரசியே கொலையை முதலிற் கண்டவர்.
கண்டதும் வீரரைக் கூட்டிச் சென்று
மண்டபந் தன்னில் மாறனைப் பிடித்தார்.

**முத்தரையர்**

என்ன? என்ன? அரசியா பிடித்தார்?

**காவலன்**

இன்னொரு சேதி. மன்னரை மாறன்
கொன்றது அரசியின் குத்து வாளால்!

**முத்தரையர்**

என்ன! கொலைவாள் அரசியின் வாளா?
நன்று! நன்று! எல்லாம் மர்மம்!
இதனில் சூது ஏதோ உள்ளது!

**காவலன்**

[மெல்ல, பக்கம் பார்த்து...]

நானும் கூடச் சொல்ல நினைத்தேன்.
எனக்குத் தெரிந்த வரையில் மாறன்
மிகமிக இனியவர். கொலைசெயத் துணியார்.
அகமிகும் அன்பால் அனைவரைக் கவர்ந்தவர்.
அருள்மலை யடிகள் மடத்திற் கூட
ஒருமுறை கண்டேன். உத்தமர்!

**முத்தரையர்**

[எங்கோ பார்த்தவாறு...]

ஆமாம்!

இதனில் ஏதோ புதிரொன் றுண்டு!
அதுதான் என்ன? அரசியின் கொலைவாள்!

[காவலன் செல்கிறான்...]

சரிசரி! அவையில் மாறன் சொல்வான்.
எப்படிப் பட்ட திட்டம் தீட்டினேன்!
இப்படி அனைத்தையும் இடித்துத் தள்ளினான்!
செப்பிய வண்ணம் தப்பி யிருந்தால்
ஒப்பிய புரட்சி ஓங்கி யிருக்கும்.
ஓரிர வதனில் உரிய ஆட்சி
மாறி இருக்கும் மாறன் கைக்கு!
கொற்றத் தவிசில் கோலம் கொள்வோன்
குற்றக் கூண்டில்! விதியோ?
சற்றும் இதனை எதிர்பார்த் திலனே!

[விரைந்து வலப்பக்கம் செல்கிறார்]

—திரை

காட்சி : 2

களம் : **புகழூர் நீதிமன்றம்**

காலம் : **காலை**

[அவையில் நிறைந்த கூட்டம். உள்ளே புக முயலும் பொதுமக்களைக் காவலர் விரட்டுகின்றனர். அவையில், நன்னனின் அரசவையினர் அனைவரும் உள்ளனர். அரசிருக்கையில் மலர்க் கண்ணி அமர்ந்திருக்கிறாள்...]

**அறவாழி**

பொன்னாட்டுப் பெரியோரே! புகழூர் மன்றம்
முன்னாளிற் காணாத வழக்கு தன்னை
ஆராய்ந்து தீர்ப்புரைக்கக் கூடிற் றின்று.
சீராகத் திகழ்ந்திருந்த மன்னர் நேற்றுக்
குத்துண்டு கொலையுண்டார். அந்த வேளை
குத்தியதன் கைகளிலே குருதி யோடு
வேந்தர்தம் மெய்காத்த மாறன் அங்கே
பாய்ந்துசெலக் கண்டரசி கைதி செய்தார்.
கொலைக்குற்றம் பாவமலைச் சிகர மாகும்.
கொலைஞர்க்குக் கொலைதனையே கொடுக்கும்
உலகம்.
அக்கொலையில் அரசகொலை நாட்டுக் குற்றம்.

எக்காலும் இங்கிதற்கு மன்னிப் பில்லை.
என்றாலும் எதனையும்நாம் விளக்க மாக
மன்றத்தில் ஆய்ந்திடுவோம்!

[தளபதி மணிவர்மனை நோக்கி...]
எங்கே மாறன்?

[தளபதி சைகை செய்ய, ஒரு காவலன் சென்று மற்றொரு காவலனுடன் நெடுமாறனை அழைத்து வருகிறான். அனைவர் கண்களும் அவனை உற்றுப் பார்க்கின்றன. மாறன், மலர்க்கண்ணியைப் பார்க்கிறான். அவள் வேறு பக்கம் பார்க்கிறாள்...]

மன்னனுக்குப் பின்னிந்த நாட்டை யாள
முன்னுரிமை பெற்றிருக்கும் அரசி, இந்த
வழக்குதனை ஆராய்ந்து தீர்ப்பு ரைப்பார்!

**மலர்க்கண்ணி**

வழக்கிதனில் ஆராய என்ன உண்டு?
ஐயமுள்ள பொருளுக்கே ஆய்வு வேண்டும்!
மெய்யதனைக் கண்டபின்பும் ஆய்வா?

**அறவாழி**

தேவி!

**மலர்க்கண்ணி**

ஆராய்ச்சி தேவையில்லை! தீர்ப்புச் சொல்வோம்!
ஆறாத புண்ணாக இதய மெல்லாம்
வேதனையில் வாடுங்கால், அறிந்த ஒன்றைச்
சோதித்துக் கொண்டிருத்தல் கொடுமை யாகும்!

**அறவாழி**

உண்மைதனை நாமறிவோம்! எனினும் அந்த
உண்மைதனை நாடறிய வேண்டும். மேலும்

கொடுஞ்செயலின் காரணமும் விளங்க வேண்டும்!
திடுமெனவே தீர்ப்புரைத்தல் முறைமை யன்று!

**மலர்க்கண்ணி**

முறைபற்றி எனக்கிங்கே கவலை யில்லை!
விரைவினிலே தீர்ப்புரைக்க எண்ணு கின்றேன்.

**அறவாழி**

வழிவழியாய் வழங்கிவரும் முறையை மாற்றின்
பழிநேரும்!

**மலர்க்கண்ணி**

நேரட்டும்!

**அறவாழி**

ஆனால் சட்டம்...

**மலர்க்கண்ணி**

சட்டத்தை யார்படைத்தார்? மாற்ற முடியாச்
சட்டமொன்றும் இவ்வுலகில் இல்லை! நம்மைச்
சிக்கவைக்கும் சிலந்திவலைக் கூடு சட்டம்.
சிக்கிவிட்டால் தெளிவில்லை; குழப்பம் மிஞ்சும்.

**அறவாழி**

எதற்காகக் கொலைசெய்தான் கொலைஞன் என்று
பொதுமக்கள் அறிந்திடவே...

**மலர்க்கண்ணி**

தேவை யில்லை!
காரணங்கள் தீர்ப்பதனை மாற்றா!

**அறவாழி**

தேவி!
பேரவையில் பேசுகின்ற உரிமை, எந்தக்
கொலைஞனுக்கும் உண்டதனை மறக்க வேண்டாம்!

**நெடுமாறன்**

நிலைமறந்தார் பேரரசி!

**மலர்க்கண்ணி**

பேசா தேநீ!
பேசுதற்கே ஒன்றுமிலை! மன்னர் தம்மைக்
கூசாமற் கொலைபுரிந்தாய்! கண்ணாற் கண்டேன்!

[நெடுமாறன் உரக்கச் சிரிக்கிறான்!
அவையினர் திகைக்கின்றனர்!]

**நெடுமாறன்**

கொடுஞ்செயலைத் தடுக்காமல் என்ன செய்தீர்?
வேடிக்கை பார்த்தீரோ அரசி?

**மலர்க்கண்ணி**

ஆ! ஆ!

**அறவாழி**

தேவி நான் சொல்லுவதைக்...

**மலர்க்கண்ணி**

கேட்க மாட்டேன்!

[அவையினர் திகைக்கின்றனர்!]

**முத்தரையர்**

சாவதனின் முனைவிளிம்பில் ஊச லாடும்
ஒருயிரை விளையாட்டுப் பொருளாய் எண்ணும்
பேரரசி! பெரியோரே! ஒன்று சொல்வேன்!
இத்திருநாட் டரியணையும் இதற்கு முன்னர்
எத்தனையோ மன்னர்களைக் கண்ட துண்டு.
ஆனாலிவ் வழிமுறையை ஒருவ ரேனும்
தாமாக மாற்றியதைக் கண்ட தில்லை.
தீர்ப்பளிக்க நீருரிமை பெறலாம். ஆனால்
தீர்ப்பின்முன் நெடுமாறன் பேச வேண்டும்.
அவையோரே! முன்னாளில் இந்த நாட்டின்

அவைதனிலே பணிசெய்த உரிமை கொண்டு
சிலசொல்ல முன்வந்தேன். இவ்வ ழக்கில்
சில செய்தி தெளிவுபெற விளங்க வில்லை.
நெடுமாறா! நீயதனை விளக்க வேண்டும்.

**மலர்க்கண்ணி**

முடியாது! முடியாது! ஒப்ப மாட்டேன்!
விதைத்தவனே அறுக்கட்டும் அதுதான் நீதி!

**முத்தரையர்**

விதைத்தவர்யார்? அறிவீரா? அதுதான் கேள்வி!

**அறவாழி**

அவையோரே! இங்கிதற்கு முடிவு என்ன?

**பலகுரல்கள்**

அவைதனிலே நெடுமாறன் பேச வேண்டும்!

**மலர்க்கண்ணி**

[திகைப்படைகிறாள்...]

அப்படியா னால்வழக்கை ஒத்தி வைப்போம்!

**முத்தரையர்**

இப்பொழுதே முடித்துத்தான் தீர வேண்டும்!

**அறவாழி**

நீண்டுசெலும் வழக்குகளில் பொய்மை மிஞ்சும்.
வேண்டுகின்ற உண்மைகளோ ஓடிப் போகும்.
மீண்டுமந்த உண்மைகளைத் தேடல் துன்பம்.
வேண்டாம்அத் தொல்லைகள். முடிப்போம் இன்றே!

**மலர்க்கண்ணி**

உங்களது விருப்பம்போல் முடிப்ப தென்றால்
இங்கிந்த அரியணையில் நானெ தற்கு?
கொலையாளி தப்பிவிட வழிவ குக்கக்
குலையாமல் ஒன்றாகச் சேர்ந்து விட்டீர்!

நடத்துங்கள் விருப்பம்போல் நீரே! இந்த
இடத்தினிலே வேலையில்லை எனக்கு!

[சட்டென எழுந்து உள்ளே போகிறாள்]

**அறவாழி**

தேவீ!

**முத்தரையர்**

தடுக்காதீர்! செல்லட்டும்! அதுதான் நன்று!
அடுக்காது நியாயமிலா அரசி கூற்று!
மலர்க்கண்ணி யாரிந்த நாட்டை யாள?
குலச்சொத்தாய்ப் பெற்றாளா; அன்றி நன்னன்
தனைமணந்த உரிமையினால் பெற்றிட் டாளா?
தினையளவும் உரிமையிலாப் பெண்ணைக் கொண்டு
நாட்டாட்சி தனைநடத்தப் பெரியோ ரெல்லாம்
வேட்கைமிகக் கொண்டதொரு விந்தை! இந்தப்
பொன்னாட்டுப் புகழூரில் செங்கோல் வேந்தன்
பொன்முடியார் ஆண்டதெலாம் மறந்தா போனீர்!
அறங்கூறும் அவைத்தலைமை அன்று பெற்ற
அறவாழி இன்றுமுள்ளார் தலைவ ராக.
அவருக்கும் இல்லாத உரிமை இந்த
நேற்றுவந்த பெண்ணுக்கு முளைத்த தென்ன?

**வாணர்**

பொறுசற்றே முத்தரையா! நாட்டை ஆள
உரியவரைத் தேர்ந்திடவோ கூடி யுள்ளோம்?
அவைமுன்னே இருக்கின்ற வழக்கு வேறு.
தவறாகத் திசைமாற்ற வேண்டாம்! இந்த
நாடாளும் உரிமையெவர்க் குள்ள தென்ற
கூடாத வாதமிங்கே வேண்டாம்!

**முத்தரையர்**

ஓகோ!

வீடாளத் திறமையிலாச் சிறுமி தன்னை
நாடாள விடுவதுவா உங்கள் திட்டம்.

பெரியோரை, பேரவையை அவம தித்தாள்.
நெறியின்றிப் பிடிவாதம் செய்தான்...

**வாணர்**

நில்நில்!
அரியணையில் வீற்றிருப்போர் யாரென் றாலும்
பெருமதிப்பைத் தந்திடலே முறைமை யாகும்.
அரசியவர் சினங்கொண்டு சென்றிட் டாலும்
அறவாழி அவர்க்காக வழக்கைத் தீர்ப்பார்!
தடையின்றித் தொடரட்டும் வழக்கு!

[முத்தரையர் சினத்தோடு அமர்கின்றார்]

**அறவாழி**

நன்று!
நெடுமாறா! நடந்ததனை விளங்கச் சொல்லு!
கொடுமைமிகும் இச்செயலை நீயா செய்தாய்?

[நெடுமாறன் மௌனமாக அரியணையை வெறித்துப் பார்த்தபடி நிற்கிறான்]

தயங்காதே நெடுமாறா! உண்மை யைச்சொல்!

**நெடுமாறன்**

[எங்கோ பார்த்தவாறு மெல்ல...]

தயங்கவிலை மயங்குகிறேன்! மயங்கு கின்றேன்!
உண்மைதனைக் காண்பதற்கு நாட்ட மிங்கே!
உண்மைதனைக் காணஅஞ்சி ஓட்ட மங்கே!
உண்மையெலாம் பொய்யென்னும் ஐய நெஞ்சம்.
பொய்யெல்லாம் உண்மையெனும் கோழை நெஞ்சம்.
பொய்யெல்லாம் மெய்யாகும் காலம் இஃது.
பொய்க்குள்ள கவர்ச்சியிந்த மெய்யிற் கில்லை.
எதுவுண்மை? எதுபொய்மை? ஆமாம்! காதல்
மதுவுண்ட ஒருவருக்கோ இரண்டும் ஒன்றே.

**அறவாழி**

நெடுமாறா! இங்கேபார்! அரசி உன்னைக்
கொடியதொரு கொலையாளி என்றார்......

**நெடுமாறன்**

ஐயா!
ஏனென்னை வீணாக வாட்டு கின்றீர்?

**அறவாழி**

நானுன்னை வாட்டவில்லை மாறா! நீதான்
ஏனோஇச் சூழலையே மறந்து விட்டுத்
தானாக ஏதேதோ பேசு கின்றாய்.
நேற்றிரவு மன்னவரின் அறைக்குள் சென்று
கூற்றுவனாய் அவருயிரைப் பறித்திட் டாயா?
அன்றியிந்தக் கொலைப்பழியை உன்றன் மேலே
நன்றாக யாரேனும் போட்டிட் டாரா?
கொலைக்குருதி பூசிநின்றாய் என்றார். அந்தக்
கொலைவாட்கு நேர்ந்ததென்ன? விளங்கச் சொல்லு!
காவலனின் மெய்காத்தாய்! ஆனால் நன்னன்
ஆவிதனை விட்டுவிட்டாய்! யார்கொன் றார்கள்?
சொல்விரைவில்! நடந்ததென்ன? உண்மை என்ன?

**நெடுமாறன்**

[வெறி கொண்டவன் போல்]

சொல்லுகிறேன்! சொல்லுகிறேன்! அவையீர்! கேளீர்!
நானேதான் மன்னவனைக் கொன்றேன்! ஆமாம்!
நானேதான் மன்னவனைக் கொன்றேன்!

**முத்தரையர்**

[சட்டென எழுந்து...]

ஆ! ஆ!

[வாணர், முத்தரையரை மேலே பேச
விடாமல் கைநீட்டித் தடுக்கிறார்.]

**அறவாழி**

ஏன்கொன்றாய் வேந்தனைநீ?

**நெடுமாறன்**

அதனை மட்டும்
நானென்றும் சொல்லிடவே மாட்டேன்!
வீணாய்க்
காரணத்தைக் கேட்காதீர்! சொல்லும் தீர்ப்பை!

**அறவாழி**

பேரவையீர்! கொலையாளி பேச்சைக் கேட்டீர்!
தீர்ப்பளித்தல் அன்றியினி வேறொன் றில்லை.
பார்த்திபனைக் கொலைசெய்த குற்றத் திற்கே
அறங்கூறும் அவையத்தின் பேரால், இங்கு
மரணத்தைத் தீர்ப்பாக விதிக்கின் றேன்நான்!

[முத்தரையர் இருப்புக் கொள்ளாமல் தவிக்கிறார்.]

கொலை செய்தோய்! எதுவேண்டும் சாவ தற்கு?
கொலைவாளா? கொடுநஞ்சா? தூக்கா?

**நெடுமாறன்**

நஞ்சு!
போய்வாநீ என்றொருவர் அனுப்பிவைத்தார்.
தாய்போல மற்றொருவன் பின்னே வந்தான்.
என்கடமை இன்னதென ஒருவர் சொன்னார்.
தன்னலத்தை மறந்தொருவர் துணையாய் நின்றார்.
பின்னொருவர் தன்னுளத்தைத் தானம் செய்தார்.
மன்னவரோ தோழனைப்போல் நடந்தார். நானோ
நம்பினோரை நட்டாற்றில் விட்டேன்! உள்ளம்
வெம்பிவிட அனைவருக்கும் கொடுமை செய்தேன்!
பெற்றவர்க்கும், வளர்த்தவர்க்கும், அன்பு கொண்ட
மற்றவர்க்கும் நஞ்சளித்த பாவி யானேன்!
நஞ்சதுவே எனக்கேற்ற பரிசு! தாரீர்!

**அறவாழி**

செஞ்சுடரோன் உதித்திடுமுன் தருவார்!

[முத்தரையர் எழுந்து அலறுகிறார்]

**முத்தரையர்**

மாறா!

—திரை

## காட்சி: 3

களம் : **அந்தப்புரம்**

காலம் : **நண்பகல்**

**மலர்க்கண்ணி**

[கைதட்டி...]

யாரங்கே? காவலனே!

[காவலன் ஒருவன் வந்து பணிந்து நிற்கிறான்...]

விரைவில் இங்கே
தேரொன்று கொண்டுவந்து நிறுத்த வேண்டும்!
தளபதியார் மணிவர்மன் தம்மை, என்னைத்
தாமதியா மல்வந்து காணச் சொல்லு!

[காவலன் விரைகிறான்]

வளமின்றிப் பட்டமரம் ஆனேன்! என்றன்
வாழ்வெல்லாம் போயிற்று! நானும் போவேன்!
வஞ்சிநகர் எனைமீண்டும் ஏற்கும். அன்று
அஞ்சிநின்று நன்னனுக்கே அடிமை யானோர்
ஏற்றிடுவார். இல்லையெனில் அங்கே சாவேன்!
மாற்றமிலை இவ்வழியைத் தவிர வேறு!

[சற்றுப் பொறுத்து...]

நெடுமாறர் எப்படித்தான் மாறிப் போனார்!
கொடுமையுடன் என்வாழ்வைச் சிதைத்தார்! ஐயோ!

[முன் சென்ற காவலன் ஓடி வருகிறான்...]

**காவலன்**

நெடுமாறர் தம்கொலையை ஒப்புக் கொண்டார்!
விடிவதற்குள் விடங்கொடுக்கத் தீர்ப்பா யிற்று!

**மலர்க்கண்ணி**

[திடுக்கிட்டுத் தடுமாறி...]

என்னஎன்ன? காவலனே! மெய்யா? தாமே
மன்னவரைக் குத்தியதாய் ஒப்பி னாரா?

**காவலன்**

உண்மைதான்! பொய்யில்லை அரசி யாரே!

[கையசைக்கக் காவலன் சென்று விடுகிறான்...]

**மலர்க்கண்ணி**

உண்மையிலை! பொய்யுரைத்தார்! என்ன விந்தை!
நன்னனையே மன்னிக்கத் துணிந்த மாறர்
என்னையுமே மன்னிக்க விரும்பி னாரா?
பாவிமகள் செய்துவிட்ட கொலையைத் தம்மின்
ஆவிதந்து மறைத்தென்னை மன்னித் தாரா?
அவருக்கோ மரணத்தைப் பரிசாய் நல்க
அவையினிலே அப்படிநான் நடந்து கொண்டேன்!
இல்லையிலை. ஏமாற்றத் தாலே நேர்ந்த
கல்மனத்தால், ஐயையோ! அறிவி ழந்தேன்!
தீரமுடன் கொடியவனைத் தொலைத்த நானோ
ஊரைவிட்டே ஓடிவிடும் கோழை யானேன்!

எனக்காக உயிர்கொடுக்க வந்த வர்க்கோ
சினத்தாலே தீங்கிழைக்கத் துணிந்தேன்! வாழ்வில்
திருப்பங்கள்! திருப்பங்கள் கணக்கே இல்லை!
இருநாளில் எத்தனைதான் மாற்றம்! மாறன்
சிறைதனிலோ வாடுகின்றார்? அந்தோ! நாளை
இருள்புலரும் வேளைக்கு முன்னே......அன்பே!
என் சூழ்ச்சி செய்தேனும் உம்மைக் காப்பேன்!
அன்றேல்நான் துணிவுடனே உண்மை தன்னைப்
பாரறியச் சொல்லிடுவேன்! வருவ தேற்பேன்!
யாரிந்த மாயாவி? எங்கே இன்று?
காரிருள்தான் கவ்விடுமுன் உண்மை காண்பேன்!

[விரைந்து வெளியே செல்கிறாள்]

—திரை

காட்சி : 4

களம் : அருள்மலையார் திருமட

காலம் : அந்தி

[அருள்மலையடிகள் கண்மூடி மௌனியா அமர்ந்திருக்கிறார். முத்தரையர் அவசரமா ஓடி வருகிறார். அடிகளார் ஓசை கேட்டுக் க திறந்து பார்க்கிறார்...]

**முத்தரையர்**

பொன்னாட்டை ஆளவந்த தலைவன் தன்னை,
பொன்முடியின் குலக்கொழுந்தை, சிறையில் தள்ளி
காய்கதிரோன் உதித்திடுமுன் சாக விட்டு
வாய்மூடி மோனத்தில் அமர்ந்திட் டீரே!
இங்கிதற்கோ அவனைநான் அழைத்தேன் சுவாமி?
உபதேசத் தாலவனை என்ன செய்தீர்?

**அருள்மலையடிகள்**

முத்தரையா! உபதேசம் மாசு போக்கும்!
சித்தத்தை ஓர்நிலையில் நிறுத்தும்! பாரில்
நல்லதையும் தீயதையும் பகுத்துப் பார்க்கும்!
எல்லார்க்கும் நன்மைசெயச் செய்யும்!

முத்தரையர்

ஆகா!
எத்தகைய நன்மைகளைச் செய்தான்! இந்த
முத்தரையன் ஓர்முட்டாள்! அவனை நம்பி
மிகப்பெரிய திட்டங்கள் தீட்டி னேனே!
அகத்தினிலே கோட்டைகள் கட்டி னேனே!
செல்லரிக்கும் மரம்போல நாளும் நாளும்
மெல்லமெல்ல அழிந்துவரும் நாட்டைக் காக்க
அஞ்சாமல் உயிரினையே பணயம் வைத்து
நெஞ்சுரக்கம் இல்லாமல் அலைந்திட் டேனே!
எல்லாமே ஓர்நொடியில் சரியச் செய்தான்!
நல்லவனாய்ச் சாவேற்கத் துணிந்தான் மாறன்.
அனைத்தையும்நீர் அறிந்திருந்தும் அவனைக் காக்க
மனதினிலோர் எண்ணமின்றி இருக்கின் றீரே!

அருள்மலையடிகள்

கொலைநடந்த நேற்றிரவு இங்கு வந்தான்.
அலைகின்ற மனதோடு கலங்கி நின்றான்.
தெளிவுபெறச் சிலவற்றைச் சொன்னேன். நெஞ்சம்
ஒளிபெற்ற அமைதியுடன் சென்றான். ஆனால்
நேற்றிரவே கொலைசெய்த தாகச் சொல்லல்
சற்றேனும் விளங்கவில்லை!

முத்தரையர்

ஓகோ! நேற்று
நெடுமாறன் கடமைசெய மாட்டேன் என்று
பிடிவாதம் செய்துநின்ற தெல்லாம் உங்கள்
அறிவுரையின் விளையாடல் தானா?

அருள்மலையடிகள்

என்ன!
நெறிப்படுத்த என்னிடத்தில் விட்டு விட்டுக்
கொலைபுரிய அவனைநீ தூண்டி னாயா?
அலைத்துரும்பாய் ஆக்கியதுன் திட்டந் தானா?

**முத்தரையர்**

செய்வதனைச் சரியாகச் செய்ய வில்லை!
மெய்யென்று நம்பேன்நான் மாறன் பேச்சை!
நேற்றிருந்த மனநிலையில் கொலையைச் செய்யான்!
செய்திருந்தால் பொன்முடியின் வாளால் அன்றி
வேற்றொருவர் வாளாலே செய்ய மாட்டான்.
குத்தியவாள் மலர்க்கண்ணி கைவாள்! ஆமாம்!
கொலைகாரர் வேறொருவர்!

**அருள்மலையடிகள்**

அவ்வா றானால்
கொலைப்பழியை எதற்காகத் தன்மேல் ஏற்றான்?

**முத்தரையர்**

எவருடைய உயிரினையோ காப்ப தற்கு!
[சற்று சிந்தித்து...]
அவனின்று பேசுதலும் கூடா தென்று
மலர்க்கண்ணி நெடுநேரம் வாதிட் டாளே!
மலர்க்கண்ணி எதைக்கேட்க அச்சம் கொண்டாள்?
ஒருவேளை அவளேதான் கொலைசெய் தாளோ?
பெருங்காத லாலவளைக் காக்க மாறன்
பழியேற்கத் துணிந்தானோ?...

**அருள்மலையடிகள்**

பார்! பார்! சூழ்ச்சி
வழிமுறையைக் கொண்டதனால் நேர்ந்த அல்லல்!

**முத்தரையர்**

ஒருவர்மேல் மற்றொருவர் குற்றம் சாட்டிப்
பெருவாதம் புரிகின்ற வேளை யில்லை.
மரணத்தின் விளிம்பினிலே ஊச லாடும்
வருங்கால மன்னவனைக் காக்க வேண்டும்!
நள்ளிரவுக் குள்அமைச்சர் மற்றோர்க் கெல்லாம்
உள்ளபடி அனைத்தினையும் விளக்க வேண்டும்!

**அருள்மலையடிகள்**

முதன்முதலில் மலர்க்கண்ணி தன்னைப் பார்நீ!
இதமாகப் பேசியுண்மை அறிந்து கொண்டு
விரைவாக வாணரிடம் உண்மை சொல்லு!
அறவாழி தம்மைநான் சந்தித் தெல்லாம்
விரிவாக எடுத்துரைத்து வாணராயர்
பெருமனைக்கு வருகின்றேன்.

**முத்தரையர்**

நன்றி சுவாமி!

[முத்தரையர் விரைந்து வெளியேறுகிறார். அடிகளார் கைகூப்பி இறைவனை வணங்குகின்றார்...]

—திரை

## காட்சி : 5

களம் : **சிறைச்சாலை**

காலம் : **பின்னிரவு**

*[சிறை அறையில் நெடுமாறன், ஒரு கோடியில் இரு கரங்களிலும் முகம் புதைத்தவாறு அமர்ந்திருக்கிறான். சற்றுத் தொலைவில், ஒரு திட்டின் மீது கோப்பை ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. கரிய உடையணிந்த மாயாவி மெல்ல உள்ளே நுழைந்து, கோப்பையருகே சென்று, அதைக் கையிலெடுத்து ஒரே மூச்சில் குடித்து விட்டுக் கோப்பையை முன்னிருந்த இடத்திலேயே வைத்து விடுகிறது! அரவம் கேட்டு நெடுமாறன் தலை நிமிர்ந்து திரும்புகிறான்...]*

**நெடுமாறன்**

யாரது? ஓ! மாயாவி! வருக! இந்தச்
சீரழிந்த நெடுமாறன் வாழ்வை நல்ல
நாடகமாய்ச் செய்தவரே வருக! இந்த
நாடகத்தின் சுவையான இறுதிக் காட்சி
காணுகின்ற வேட்கையினால் வந்தீர் போலும்!

**மாயாவி**

வேணுமந்த முத்தரையர்க் கிதுவும், இன்னும்!

*[பெண்குரல் வரக்கண்டு நெடுமாறன் திகைப் படைந்து...ஐயத்துடன்]*

**நெடுமாறன்**

பெண்குரலில் மாயாவி! யார்நீ?

*[மாயாவி முகத்திரை நீக்க, மலர்க் கண்ணி!]*

**மலர்க்கண்ணி**

நான்தான்!
பெண்பிறவி எடுத்துவந்த பாவி யேதான்!

**நெடுமாறன்**

மலர்க்கண்ணி மாயாவி உருவில்! ஆ! நீ
உலகுறங்கும் வேளைதனில் இங்கேன் வந்தாய்?

**மலர்க்கண்ணி**

உலகுறங்கும் வேளைதான். உள்ளம் வெந்த
மலர்க்கண்ணி கண்ணுறங்க முடிய வில்லை.
கவலைப்பேய் பற்றிவிட்டால் கண்ணீர் விட்டுத்
தவிக்காதே என்செய்வாள்? இன்னும் சற்று
நேரத்தில் மீளாத உறக்கம் கொள்வேன்.
விரைவினிலே சொல்லுவதைச் சொல்ல வேண்டும்.
வஞ்சகத்தைப் பெற்றெடுக்கும் 'காதல் தோல்வி'
நெஞ்சகத்தைச் சூழ்ந்ததனால் அரக்கி யாகி,
காதலனைக் கொலைக்களத்திற் கனுப்ப வந்த
காதலியைக் காப்பாற்ற உயிர்கொ டுத்தீர்!
ஏனென்மேல் இரக்கமழை பொழிந்தீர்? மண்மேல்
மீனாகத் தவித்திடவோ மன்னித் திட்டீர்?
நீறுபூத்த அனலாகிக் கிடந்த காதல்
சீறியெழ ஏன்செய்தீர் அணையும் முன்னே?
கொலைக்கரத்தைத் தீண்டிடவும் மறுத்தீர்! உம்மை
அலைத்தழியச் செய்தவட்கா மன்னிப் பெல்லாம்!

**நெடுமாறன்**

கொலைசெய்தால் தான்பாவம் என்பதில்லை.
கொலைசெய்ய எண்ணுதலும் பாவமாகும்.
சற்றுமொரு கறையின்றி இருந்தாய். நானோ
குற்றமனச் சுமையேந்தி வந்தேன். உன்னைக்
கொலைகாரி ஆக்கியதும் நானே! அந்தக்
கொலைப்பழியும் என்னைத்தான் சாரும்.

**மலர்க்கண்ணி**

இல்லை!
குற்றத்தைச் செய்தவரைச் சிறையில் தள்ளும்
கொற்றவனார் பிறர்பழியைத் தாமே ஏற்றுச்
சாவறையில் வாடுவதா? கொடுமை!

**நெடுமாறன்**

நானா?
காவலனா? மலர்க்கண்ணி! யார்சொன்னார்கள்?

**மலர்க்கண்ணி**

யாரும்மை அரியணையில் ஏற்றி வைத்துச்
சீருடனே நாடாள வைக்க எண்ணி
எல்லையிலாத் தொல்லைகளுக் காளானாரோ,
எவரைநீர் நடுவழியில் கைவிட் டீரோ
அவரேதான்!

**நெடுமாறன்**

முத்தரையர்!

**மலர்க்கண்ணி**

ஆமாம்! இங்கே
உம்முயிரைக் காத்திடவும், இப்பொன் னாட்டில்
செம்மைமிகு நல்லாட்சி நிலைப்ப தற்கும்
என்னைத்தன் கருவியென ஆக்கிக் கொண்டார்.
முன்னிரவில் எனைக்கண்டு தங்கள் தந்தை

பொன்முடியார் என்பதெலாம் சொன்னார்! நீங்கள்
இந்நாட்டின் நலன்கருதி வாழ வேண்டும்.
இக்கரிய உடைமாற்றி என்னைப் போலே
மிக்கவிரை வாகவிந்தச் சிறையை விட்டே
முத்தரையர் மாளிகைக்குச் செல்ல வேண்டும்!
இத்தூய கணையாழி தடைகள் நீக்கும்.

[முத்திரை மோதிரம் ஒன்றை எடுத்து நீட்டுகிறாள். நெடுமாறன் அதைப் பெற்றுக் கொள்ளாமல் நிற்கிறான்...]

விரைந்திடுவீர்!

**நெடுமாறன்**

மலர்க்கண்ணி! யாரும் என்னைச்
சிறைதனிலே கொண்டுவந்து தள்ள வில்லை.
நானேதான் இம்முடிவை ஏற்றேன். பின்னர்
நானேன்இச் சிறைதப்பி ஓட வேண்டும்?
எதற்காக? யார்க்காக? வேண்டாம்! போபோ!

**மலர்க்கண்ணி**

இதயத்தைக் கல்லாகச் செய்து கொண்டீர்!
தலைவனில்லா மரக்கலம்போல் தவித்து வாடும்
நிலையிழந்த பொன்னாட்டின் ஆட்சி ஏற்பீர்!
அரசுரிமை மரபுவழி உமக்கே உண்டு.
மறுக்காதீர்! அருள்கூர்ந்தென் சொல்லைக் கேட்பீர்!

**நெடுமாறன்**

நாடாள என்றும்நான் விழைந்த தில்லை.
ஓடோடி இப்புகழூர் வந்த தெல்லாம்
எனையீன்ற பெற்றோரை அறிவ தற்கே.
அனைத்தையுமே அறிந்ததன்பின் மனமு டைந்து
வஞ்சத்தால் பழிவாங்கத் துடித்தேன்! அன்றி
நெஞ்சாலும் நாடாள நினைக்க வில்லை.
பழிதீர்த்தல் குறைமனத்தின் வேட்கை யென்றும்
அழிவில்லா மன்னிப்பே உயர்ந்த தென்றும்

தெளிவடைந்தேன். அதற்குள்ளே விதியின் கைகள்
விளையாடி விட்டதினி முடிந்த தெல்லாம்!
வீணாய்ஏன் இடரைவிலை பேசு கின்றாய்?
வாணாளாம் மதுக்கிண்ணம் தன்னில் எஞ்சி
நின்றசில துளிகளையும் குடித்து விட்டேன்.
சென்றுவிடு மலர்க்கண்ணி!

[திட்டின் மேலிருக்கும் நச்சுக் கோப்பையைப் பார்த்து விட்டு, அதன் அருகே சென்றவாறு...]

ஓ! ஓ! நஞ்சு
தன்னைமுன்பே கொண்டுவந்து வைத்திட் டாரோ?
என்வாழ்வின் துயர்போக்கும் அமுதம்!

[கோப்பையைக் கையிலெடுக்கிறான். அதில் ஒன்றுமில்லாததைக் கண்டு திடுக்கிட்டு...]

ஆ! ஆ!
வெறுங்கோப்பை! இதிலிருந்த அமுதம் எங்கே?
திருடியதை யாரேனும் குடித்திட் டாரா?
நெடும்பயணம் செல்லத்தேர் ஏறும் வேளை
திடுமெனவே தேரழியும் கதையா? இந்தத்
தேவையிலாத் தாமதத்தால் தவறு நேரும்!
சாவதற்கும் இடையூறா?

[மலர்க்கண்ணியைப் பார்த்து ஐயத்துடன்...]

நீபார்த் தாயா?

[மலர்க்கண்ணி 'ஆம்' என்பதற்கு அறிகுறியாக மெல்லத் தலையசைக்கிறாள்! நெடுமாறன் பதறுகிறான்...]

ஐயையோ! மலர்க்கண்ணி! என்ன செய்தாய்?
மெய்யாக அதனைநீ குடித்தா விட்டாய்?

[‘ஆம்’ என்பதற்கு அறிகுறியாகத் தலை யசைக்கிறாள். நெடுமாறன் பதறித் துடித்துப் பாய்ந்து...]

மலர்க்கண்ணி! என்னஇது! உண்மை தானா?
கொலைநஞ்சை நீயெதற்குக் குடித்தாய்? உன்னைக்
காப்பதற்கு நான்செய்த தெல்லாம் வீணா?
சாப்பறவை சிறகடித்து வந்த வேளை
கூப்பிட்டே அதற்குன்னை இரைதந் தாயா?

மலர்க்கண்ணி

குற்றமிலாத் தூயவர்கள் கருணை யாலே
மற்றவர்தம் பழியேற்கத் துணியும் போது
சற்றேனும் இரக்கமிலா நெஞ்சம் கொண்டென்
குற்றத்தை நான்மறைத்தேன் வாழ வேண்டும்?
இருட்காட்டில் திக்கின்றித் துணையு மின்றி
விரட்டுகின்ற அச்சத்தால் அரற்றி ஓடும்
சிறுகுழந்தை போல்தவித்த என்றன் வாழ்வில்
இடரோட்டும் கதிரவனாய் வந்தீர்! ஆனால்
நொடிப்பொழுதில் ஒளிமறைத்துத் துன்பப் பாழில்
தடுமாறி விழச்செய்தீர்! இனிமேல் என்ன?
வாழ்வதற்கோர் காரணமும் இல்லை! செத்து
வீழ்வதற்கோ பலவுண்டு! பயனும் உண்டு!

நெடுமாறன்

இல்லை, மலர்! உன்னைநான் வெறுக்க வில்லை.
முல்லைமலர் போல்தூய்மை கொண்ட கைகள்
கொலையாலே கறைப்படவும் அதிர்ச்சி கொண்டென்
நிலையிழந்தேன். வரம்பின்றி ஏசி விட்டேன்.
தொல்லைகட்குக் காரணமாம் என்வாழ் விற்கோர்
எல்லைகட்டி முடித்திடவே இங்கே வந்தேன்.
என்னுளத்தில் பெருமாற்றம் நிகழ்ந்த துண்மை.
என்றாலும் உன்காதல் மறக்க வில்லை.
நம்மிடையே பூத்திருந்த காதல் எண்ணி

நிம்மதியாய் உயிர்விடவே நினைத்தேன். ஆ! ஆ!
அதற்குள்ளே ஏனிங்கு வந்தாய்? வந்து
மதுப்போல என்நஞ்சைக் குடித்தேன் தீர்த்தாய்?
ஒரு துளியும் எனக்காக வைக்கா மல்நீ
சிறுகுழந்தை போல் முழுதும் குடித்தாய்! அந்தோ!
ஓர் வார்த்தை முன்பேநீ சொல்ல லாமே!
ஆர்வமுடன் உன்முடிவில் சேர்ந்தி ருப்பேன்!
மேவுகின்ற வாழ்விழந்த இருவர் ஒன்றாய்ச்
சாவதனில் இணைந்திருப்போம்! என்ன
செய்தாய்!

**மலர்க்கண்ணி**

போதுமிந்தச் சிலசொற்கள்! அமுதம் போல
வேதனைசேர் மனப்புண்ணை ஆற்றிற் றிங்கே.
குறையில்லா மனத்துடனே சாவேன்! நெஞ்ச
நிறைவைத்தான் தந்ததற்கு நன்றி! தாங்கள்
எனைக்காக்க உயிர்கொடுத்த கடனைத் தீர்த்தேன்.
இனிக்கின்ற நினைவோடு சாவேன்!

**நெடுமாறன்**

ஆகா!
கடனாநீ எனக்களித்தாய்? இல்லை! என்னைக்
கடனாளி ஆக்கியன்றோ போகின் றாய்நீ!
வாழ்வதற்குத் துணைவரத்தான் முடிய வில்லை.
வீழ்ந்திடுவோம் சாக்கடலி லேனும் ஒன்றாய்!
எப்படிநான் உயிர்விடுவேன்? ஆ! ஆ! என்னை
இப்படிநீ தனிமரமாய்ச் செய்திட் டாயே!
பனித்துளியின் அளவேனும் அந்த நஞ்சுன்
கனியிதழில் இருக்காதோ? சுவைத்துச் சாவேன்!

**மலர்க்கண்ணி**

நீங்களினி உயிர்வாழ வேண்டும்! நெஞ்சம்
ஏங்கியழி யாமலிதைக் கனவாய் எண்ணி
நாட்டுநலன் தனைக்கருதி ஆள வேண்டும்.

வாட்டுகின்ற துயர்களெலாம் நீக்க வேண்டும்.
நன்னனுயிர் குடித்ததற்கு விலையாய் என்றன்
இன்னுயிரைத் தந்துவிட்டேன். இதுதான் நீதி!
உங்களைநான் துணைக்கழைத்துச் சென்றால்,
தங்களது நாட்டுநலன் கெடுத்து விட்ட
பேயாக மக்களெலாம் பழிப்பர். அந்த
மாயாத பழிக்கென்னை ஆளாக் காதீர்!

### நெடுமாறன்

இணைபிரிந்த அன்றில்கள் வாழ்வ தில்லை.
துணையிழந்த மணிப்புறவும் வாழ்வ தில்லை.
பறவையினும் கீழாக மனிதன் மட்டும்
உறுகாதல் துணையிழந்தேன் வாழ வேண்டும்!

### மலர்க்கண்ணி

அன்றிலுக்கும், நல்லமணிப் புறாவி னுக்கும்
என்னாளும் காதலன்றிக் கடமை ஏது?
மனிதருக்குக் கடமையுண்டே! கடமை முன்னர்
இனிக்கின்ற காதலடி பணியும் அன்றோ?

### நெடுமாறன்

நஞ்சுதோய்ந்த நாவாலே அமுதம் தன்னை
விஞ்சுகின்ற சொற்களைநீ வீசு கின்றாய்!
மனமாற்றம் கொள்வனென்றோ நம்புகின்றாய்?
இனிப் புதிய முடிவில்லை! மாற்ற மில்லை!
கனிமொழியே! ஏனென்னைக் கருணை யின்றித்
தனிநரகப் படுகுழியில் தள்ளுகின்றாய்?
வீரனைப்போல் இச்சாவை ஏற்ப தன்றிச்
சோரனைப்போல் நித்தநித்தம் சாக வாநான்?
அடுத்துவரும் இணைபிரியா வாழ்வு என்னும்
நெடுமனைக்கே இம்மரணம் திறவு கோலாம்!
அச்சமென்ன மலர்க்கண்ணி? வந்தேன் நானும்!

நிச்சயமாய் இனும்கொஞ்சம் நஞ்சு கிட்டும்.
ஆருயிரே! இப்படிநீ அமர்க!

[ஒரு கோடிக்குச் சென்று வெளியே பார்த்து.........]

ஐயா!

யாரங்கே? காவலரே!

ஒரு குரல்

என்ன? என்ன?

நெடுமாறன்

ஐயாநீ வைத்திட்ட நச்சுக் கோப்பை
கைபட்டுக் கவிழ்ந்திடவே செய்து விட்டேன்.
அருள்கூர்ந்தே இனும்சிறிது தாரீர்!

அதே குரல்

அடடா!

இருந்ததெலாம் அத்துணைதான்! சொட்டும்
இல்லை!

நெடுமாறன்

[பதறிப் போய்...]

ஐயையோ! என்னசொன்னீர்? நீதி யில்லை
மெய்யாகக் கேட்கின்றேன்! தாரீர் கொஞ்சம்!

[பதிலில்லை...]

மென்மலரே! நாமிருவர் இணைவ தற்கு
தன்னனன்று பெருந்தடையாய் நின்றான். இன்று
சாவினிலும் நமைப்பிரிக்கச் சூழ்ச்சி செய்தார்!
ஆவிதனைப் போக்குதற்கே என்ன செய்வேன்!

[கைகளைப் பிசைந்தபடி சுற்றுமுற்றும் பார்க்கிறான்...]

**மலர்க்கண்ணி**

வீரரிடம் கேட்காதீர்! தந்தால் என்ன!
சாரமிலாப் பழம்நஞ்சு! பாரீர் என்னை!
பெருங்கனலாய் உள்ளெரித்துக் கொடிய, தாக
வெறிகொள்ளச் செய்யுமென்றார்! ஒன்றும்
காணோம்!

**நெடுமாறன்**

மலர்க்கண்ணி! எல்லாம்ஓர் கனவா?

**தடித்தகுரல்**

இல்லை!

[மாறன் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்புகிறான். முத்தரையர், அறவாழி, அருள்மலையடிகள், வாணராயர், மணி வர்மன் முதலானோர் வருகின்றனர்...]

**முத்தரையர்**

கலங்காதே நெடுமாறா!

**நெடுமாறன்**

ஆ! ஆ! யார்! யார்!

**முத்தரையர்**

எல்லாம்உன் நலம்நாடும் பெரியோர் கள்தாம்!
தொல்லையெலாம் விலகிற்றுப் பனிபோல்! ஆகா!
சாகத்தான் எத்தகைய துடிப்பு! நெஞ்சின்
வேகத்தால் அனைத்திலுமே எல்லை கண்டாய்!
அன்றேநான் உனைமுதலாகக் கண்ட போதே
பொன்முடியைப் பெற்றவன்போல் மகிழ்ந்து
போனேன்!
அவன் போன்றே துடித்திட்டாய் அநீதி கண்டு.
அவன் போன்றே உயிர்தரவும் தயங்க வில்லை!

**நெடுமாறன்**

*பெரியோரே! என்னஇது? கொடுமை! உங்கள்*
*அரசியிங்கே எனக்காக வைத்த நஞ்சை*
*நானறியா மல்எடுத்துக் குடித்து விட்டாள்!*
*ஏனிவளை அணுஅணுவாய்ச் சாக விட்டுப்*
*புகழ்மொழியால் எனைக்கொல்ல நிற்கின் றீர்கள்?*
*அகழ்ந்தீரோ புதைகுழிகள் இரண்டு, முன்பே?*

*[முத்தரையர் கலகலென உரக்கச் சிரிக்கிறார்...]*

*மரணத்தின் தூதர்களே! சிரிப்ப தெற்கு?*

**முத்தரையர்**

*சரியாகச் சொல்லிவிட்டாய் மாறா! சாவுத்*
*தூதுவன்நான் என்பதுமோர் உண்மை! வாழ்வின்*
*மீதிருக்கும் உரிமையினைத் தூதன் மாற்றி*
*உரியவர்க்கே பரிசாகத் தரலாம் இலையா?*
*அரசிக்கே அவருயிரைத் தந்தேன்! என்ன?*

**நெடுமாறன்**

*[கசப்புடன்...]*

*என்வாழ்வைப் பகடைபோல் உருட்டி விட்டே*
*என்னெனவோ விளையாடித் தீர்த்தீர் முன்பு.*
*கையிலின்றே இவளுயிரை எடுத்து விட்டீர்.*
*செய்யுங்கள் செய்வதெலாம்! ஆனால் ஒன்று!*
*கண்முன்னே இவள்சாகச் சகியேன்! நானும்*
*பெண்ணிவள்முன் மாய்ந்திடுவேன்! ஒருவாள் தாரீர்!*

*[மணிவர்மனின் இடையில் தொங்கும் வாளைக் குறிவைத்து மாறன் விரைய, முத்தரையர் அவனைத் தடுக்கிறார். மணிவர்மன் எச்சரிக்கையுடன் பின்னடைகிறான்.]*

**முத்தரையர்**

பொறுமைகொள் நெடுமாறா! இவர்கள் இங்கே
சிறைதேடி இவ்விரவில் வந்த தெல்லாம்
தற்கொலைக்கு வாளுதவி செய்வ தற்கா?
பொற்புடைய பொன்னாட்டின் பழைய வாழ்வு
மீண்டுமிங்கு தழைக்கவன்றோ பாடு பட்டேன்!
ஆண்டவனே! எத்தகைய இடர்கள்!

**நெடுமாறன்**

[பொறுமையிழந்து தவிப்புடன்...]

ஐயா!
வதைக்காதீர் எம்மிருவர் உயிரை!

**முத்தரையர்**

மாறா!
பதைக்காதே! கவலைவிடு! அரசி சாகாள்!

**நெடுமாறன்**

வேடிக்கை!

**முத்தரையர்**

வேடிக்கை யன்று மாறா!
நாடியிவர் குடித்ததுவோர் நஞ்சே அன்று!

**நெடுமாறன்**

[திகைப்புடன் மலர்க்கண்ணியை நோக்கி...]
நஞ்சிலையா? மலர்க்கண்ணி! என்ன இஃது?

**மலர்க்கண்ணி**

[நெஞ்சைத் தடவியவாறு...]

நஞ்சிலையா?

**அறவாழி**

பானகம்தான் அம்மா! இன்று
முன்னிரவில் முத்தரையர் நடந்த வெல்லாம்
என்னிடத்தில் சொன்னார். என் ஆணை பெற்றுச்
சிறைத்தலைவ ரைக்கொண்டு மாற்றம் செய்தார்!
உங்களது பாசத்தை மோத விட்டே
எங்களையெல் லாம்காண அழைத்து வந்தார்!

**வாணர்**

[நெடுமாறனை நோக்கி...]

இந்நாட்டு மன்னரினித் தாங்க ளேதான்!

**முத்தரையர்**

[மலர்க்கண்ணியை நோக்கி...]

இந்நாட்டின் அரசியினித் தாங்க ளேதான்!

**மணிவர்மன்**

வாழியஇப் பொன்னாடு! வாழ்க மன்னர்!

**அருள்மலையடிகள்**

[மெல்லப் பாடுகின்றார்]

வகையோடு வாழும் வழிவேண்டின் நெஞ்சப்
பகைநீக்கி வாழ்க பணிந்து.

—திரை

(மொத்தம் : 2034 அடிகள்)



மூன்றாம் பிறை

(மாணவர்க்கான குறிப்புகள்)

**அங்கம் : 1 அந்திமாலை**

காட்சி : 1 நெடுமாறன், அன்பரசு உரையாடல். நெடுமாறனின் பிறப்பின் இரகசியம் பற்றிய ஓலை வரல்.

காட்சி : 2 புகழூரில் நெடுமாறன், அன்பரசு, முத்தரையரைச் சந்தித்தல். மன்னன் நன்னனின் அறிமுகம்.

காட்சி : 3 அரசவைக் காட்சி.

காட்சி : 4 சோலையில் மலர்க்கண்ணி, நெடுமாறன் சந்திப்பு.

காட்சி : 5 நாடகப் பாத்திரங்களின் தனிமொழிகள்.

**அங்கம் 2 : இரவு**

காட்சி : 1 சோலையில் நெடுமாறன் மலர்க்கண்ணியுடன் உரையாடிக் கொண்டிருக்கையில் வாள் வரல்

காட்சி : 2 நெடுமாறன், அருள்மலையடிகளிடம் அருளுரை பெறல்

காட்சி : 3 அரண்மனையில் இரவு. நெடுமாறன் முத்தரையர்.

காட்சி : 4 நன்னன் கொலை. நெடுமாறன் கைது.

**அங்கம் 3: விடியல்**

காட்சி : 1 நீதிமன்றப்பகுதியில் ஊரார், ஏவலர் பேச்சு.

காட்சி : 2 நீதிமன்றத்தில் வழக்கு நடத்தல்.

காட்சி : 3 அந்தப்புரத்தில் மலர்க்கண்ணி குழப்பத்தில்.

காட்சி : 4 அருள்மலையடிகளை முத்தரையர் சந்தித்து வாதமிடல்.

காட்சி : 5 சிறைச்சாலையில்......



"And gentles, thus I end my play:
Urge no more words, I have no more to say."

— HIERONIMO
in THE SPANISH TRAGEDY
by Thomas Kyd

## இந்நூலாசிரியர்

25 ஆண்டுக்கால மேடை நாடக அனுபவம் உடையவர். நீதிக்காக, சலங்கை, சத்திய சோதனை, மூடிய கதவு, நம்பிக்கை, ராகமாலிகை, பிரார்த்தனை, ஓடம், பாலூட்டி வளர்த்தகிளி — என்ற 9 முழுநீள நாடகங்கள் அரங்கேற்றப்பட்டு, போட்டிகளில் முதல் பரிசு பெற்றன. சலங்கை, பாலூட்டி வளர்த்த கிளி, ஓடம், ராகமாலிகை ஆகியவை வேறு பெயர்களில் திரைப்படங்களாகியுள்ளன. தொடர்ந்து மூன்றாண்டு களுக்கு மேலாக கதை, வசனம், பாடலுக்கான முதல் பரிசு பெற்றமைக்காக 'நாடக கலாரத்தினம்'—என்ற விருது வழங்கப்பட்டது. பிறகு மரபு வழி நாடகங்களைத் துறந்துவிட்டு, நவீன நாடக முயற்சிகளில்—'போர்வை போர்த்திய உடல்கள்', 'நாற்காலிக்காரர்', 'வயிறு' 'பசு,' 'தலைவர்', 'கழுதையும் கிழவனும்' முதலிய நாடகங்களை இயக்கி நிகழ்த்தினார். பாரதி நூற்றாண்டு விழாவிற்காக இவர் எழுதிய 'குயில் பாட்டு'—கவிதை இசை நாடகத்தை தமிழகத்தின் எல்லா வானொலி நிலையங்களும் ஒலிபரப்பின. ஜெயந்தனின் நாவல் 'இந்தச் சக்கரங்கள் ஏன் சுழல்வதில்லை' நாடகமாக இவரால் ஆக்கப்பட்டு '84-ம் ஆண்டின் வானொலி நாடக விழாவில் சிறந்த நாடகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

'சங்கமம்', 'அஞ்சலி'—ஆகிய இரு நாடகக் கழகங் களின் தலைவர்.